(b) the number of schemes taken up already and the names of the cities to be benefited?

THE HON. SRI R. VENKATARAMAN : (a) Nil, Sir.

(b) Does not arise.

*Fertilizer factory at Katpadi*

* 360 Q.—SRI S. M. ANNAMALAI (on behalf of Sri V. K. Kothandaraman) : கனம் கைத்தொழில் அமைச்சர் அவர்கள் தயவு செய்து பதிலளிப்பாரா—

(அ) வடஆற்காடு ஜில்லாவில் காட்பாடியில் நடந்து கொண்டிருந்த ஒரு உரத் தொழிற்சாலை இப்பொழுது மூடப்பட்டிருப்பது தெரியுமா ?

(ஆ) அதற்கு காரணம் என்ன ?

(இ) அதை மீண்டும் திறந்து நடத்துவதற்கான முயற்சி சர்க்கார் எடுத்துககொண்டார்களா ?

THE HON. SRI R. VENKATARAMAN : (a) to (c) The hon. Member is apparently referring to the "Southern India Fertilizers" situated in Vallimalai Road, Katpadi. The factory was closed down from 31st December 1957 due to financial difficulties. It has since been revived by the previous manager and is functioning with effect from 28th January 1959 with a complement of ten workers.

MR. SPEAKER : Questions are over.

[*Note*.—An asterisk (*) at the commencement of a speech indicates revision by the Member.]

## II.—ANNOUNCEMENTS *RE* BILLS PASSED BY THE COUNCIL.

MR. SPEAKER : I have to announce that the Tiruchirappalli Kaiaeruvaram and Mattuvaram Bill, 1958 (L.A. Bill No. 25 of 1958) has been passed by the Council on 12th February 1959 without any amendment and the Madras Open Places (Prevention of Disfigurement) Bill, 1959 (L.C. Bill No. 8 of 1958) passed by the Council on 13th February 1959 has been received for the concurrence of the Assembly. 10 a.m.

## III.—GOVERNMENT BILL.

### THE MADRAS GENERAL SALES TAX BILL, 1958 (L.A. BILL NO. 6 OF 1958)—*cont.*

MR. SPEAKER : We shall now proceed with the consideration of the Madras General Sales Tax Bill, 1958. Yesterday we have finished all the clauses and we are left with the consideration of the Schedules.

The motion is—

"That the First Schedule do stand part of the Bill."

SRI K. SATTANATHA KARAYALAR : Sir, I move—

"In item 15, *for* the figure '½', *substitute* the figure '1'".

The amendments were duly seconded.

SRI A. GOVINDASAMY : Sir, I move—

" *Omit* item 20."

The amendment was duly seconded.

SRI N. K. PALANISAMI : Sir, I move—

" *For* the existing entries in columns (1), (2), (3) and (4), *substitute* the following :—

| *Serial number.* | *Description of the goods.* | *Point of levy.* | *Rate of tax (per cent)* |
|---|---|---|---|
| (1) | (2) | (3) | (4) |
| 21 | (No change) | (No change) | 1 |
| 22 | ,, | ,, | 1 |
| 23 | ,, | ,, | 7 |
| 25 | ,, | ,, | 7 |
| 27 | All kinds of wood and timber and similar articles | ,, | 1 |
| 30 | (No change) | ,, | 5 |
| 31 | ,, | ,, | 7 |
| 35 | ,, | ,, | 3 |
| 52 | ,, | ,, | 10 |
| 58 | ,, | ,, | 3 |

The amendment was duly seconded.

SRI S. M. ANNAMALAI : Sir, I move—

" *Omit* items 21 and 36 and re-number the other items."

The amendment was duly seconded.

SRI A. GOVINDASAMY : Sir, I move—

" *Omit* items 21 and 22."

The amendment was duly seconded.

SRI T. S. RAMASWAMY PILLAI : Sir, I move—

" In item 22, column (4), *for* the figure ' 3 ', *substitute* the figure ' ½ '."

The amendment was duly seconded.

SRI N. K. PALANISAMI : Sir, I move—

" *Omit* item 22."

The amendment was duly seconded.

SRI M. S. SELVARAJAN : Sir, I move—

" In item 27, column (2), *omit* the words and brackets ' (excluding Firewood and Charcoal) '."

The amendment was duly seconded.

14th February 1959]

SRI N. K. PALANISAMI : Sir, I move—

" In item 27, column (4) *for* the figure ' 3 ', *substitute* the figure ' 1 '."

The amendment was duly seconded.

SRI T. S. RAMASWAMY PILLAI : Sir, I move—

" In item 36, column (4) *for* the figure ' 5 ', *substitute* the figure ' 1 '."

The amendment was duly seconded.

SRI K. SATTANATHA KARAYALAR : Sir, I move—

" In item 36, column (4) *for* the figure ' 5 ', *substitute* the figure ' 3 '."

The amendment was duly seconded.

SRI K. SATTANATHA KARAYALAR : Sir, I move—

" In item 38, column (4) *for* the figure ' 5 ', *substitute* the figure ' 2 '."

The amendment was duly seconded.

SRI N. K. PALANISAMI : Sir, I move—

" *After* item 38, *insert* the following item, viz.,—

" 38-*A* Washing Soap At the point of First sale in the State 1 ".

The amendment was duly seconded.

SRI N. K. PALANISAMI : Sir, I move—

" In item 28, column (4) *for* the figure ' 6 ', *substitute* the figure ' 1 '."

The amendment was duly seconded.

SRI S. M. ANNAMALAI : Sir, I move—

" In the first Schedule *delete* the item 36; "

" In item 42, under column (2), *add* the words and brackets, ' (excluding agricultural goods) ', *after* the word ' parts '."

The amendments were duly seconded.

SRI K. SATTANATHA KARAYALAR : Sir, I move—

" In item 45, column (4), *for* the figure ' 6 ', *substitute* the figure ' 3 '."

The amendment was duly seconded.

SRI N. K. PALANISAMI : Sir, I move—

" In item 46, *for* the figure ' 6 ', in column (4) *substitute* the figure ' 3 '."

The amendment was duly seconded.

SRI K. SATTANATHA KARAYALAR : Sir, I move—

" In item 53, column (4), *for* the figure ' 6 ', *substitute* the figure ' 5 '."

The amendment was duly seconded.

SRI K. SATTANATHA KARAYALAR : Sir, I move—

" In item 60, column (2), *omit* the words ' Wattle Bark including '."

The amendment was duly seconded.

SRI M. S. SELVARAJAN : Sir, I move—

" In item 62, column (4), *for* the figure ' 3 ', *substitute* the figure ' 2 '."

The amendment was duly seconded.

SRI T. S. RAMASWAMY PILLAI : Sir, I move—

" In item 62, column (4), *for* the figure ' 3 ', *substitute* the figure ' 1 '."

The amendment was duly seconded.

SRI N. K. PALANISAMI : Sir, I move—

" *Omit* item 62 and re-number the rest of the items.

" In item 63, column (4), *for* the figure ' 3 ', *substitute* the figure ' 1 '."

The amendment was duly seconded.

SRI S. M. ANNAMALAI : Sir, I move—

" *Omit* item 64."

The amendments were duly seconded.

SRI T. S. RAMASWAMY PILLAI : Sir, I move—

" In item 64, column (4), *for* the figure ' 2 ', *substitute* the figure ' 1 '."

The amendment was duly seconded.

THE HON. SRI R. VENKATARAMAN : Sir, I move—

" Item 21 shall be *deleted* and the remaining items shall be *re-numbered*."

14th February 1959] [Sri R. Venkataraman]

"In column (4), against item 62, *for* the number '3', *substitute* the number '2'."

"In item 28, in column (4), *for* the figure '6', *substitute* the figure '3'."

MR. SPEAKER : The Schedule and the amendments are before the House for discussion.

SRI M. S. SELVARAJAN : Sir, என்னுடைய ஒரு திருத்தம் விறகுக்கும் கரிக்கும் இன்றையதினம் பலமுனையில் விதிக்கப்பட்டு வருகிற தீர்வையை .

THE HON. SRI R. VENKATARAMAN : May I suggest, Sir, that we can take up item by item for discussion so that it will be easier to deal with the criticisms. Otherwise, we will have to mix together different items on different subjects. Therefore, we may take up the amendments to the items in the Schedule in their order. Item after item may be taken up. It will facilitate discussion.

MR. SPEAKER : Every hon. Member will be going on speaking on every amendment.

THE HON. SRI R. VENKATARAMAN : Otherwise, it will be difficult to answer the point raised in respect of every amendment.

MR. SPEAKER : I have no objection.

Sri K. Sattanatha Karayalar may speak on his amendment (No. 158).

*SRI K. SATTANATHA KARAYALAR: சபாநாயகர் அவர்களே, இந்த "புலியன் அண்டு ஸ்பீஸிஸ்"க்கு அரை சதமானம் வரி போட்டிருக்கிறது. ஆனால் அதே நேரத்தில் "பினிஷ்ட் ப்ராடெக்ட்ஸ்"–க்கு 31–வது ஐடத்திலே "ப்ரெஷஸ் ஸ்டோன்ஸ்", "டைமண்ட்ஸ்" முதலியன பொருத்தப்பட்ட நகைகளுக்கு 3 சதமானம் போடப்பட்டுள்ளது. சாதாரணமாக நகைக் கடையில் நடக்கக்கூடிய பழக்கம் என்னவென்றால், புலியனை வாங்கிக் கொடுத்ததாக வரவு வைத்துவிட்டு அதாவது 5 சவரனுக்கு ஒரு பொருள் வேண்டுமானால், வாங்க வந்தவர்கள் 5 சவரன் வாங்கியதாகக் காட்டி, அதற்கு ½ சதமானம் வரி வசூலித்து விட்டு, அதை அவர்கள் கொடுத்து அதிலிருந்து நகை செய்ததாகக் போட்டுக்கொடுத்து விடுகிறார்கள். தங்கம் யாருமே கொடுப்பதில்லை. "பினிஷ்ட் ப்ராடெக்ட்ஸ்"–க்கு ஒரு வரியும் "புலியன்"–க்கு ஒரு வரியும் போட்டால் இந்த முறையில் தப்பித்துக் கொண்டு விடுகிறார்கள். "புலியன்"–க்கு ½ சதமானமாகவும், 31–லே 3 சதமானமாகவும் இருப்பதால் அரசாங்கத்திற்குக் கிடைக்கவேண்டிய கணிசமான பணம் கிடைக்காமல் போகிறது. ஏதோ ஒரு விதத்தில் மாறுதல் ஏற்படுத்தினால் நல்லது. அமைச்சர் அவர்கள் கூறக்கூடும், புலியன் ரேட் கூட்டினால் இதர மாகாணங்களுக்கு வியாபாரம் போய் விடக்கூடும் என்று. இப்படி இருப்பதைத் தவறாகப் பயன்படுத்திக்கொள்ளச் சந்தர்ப்பம் இருப்பதற்கு மாற்று வழி கண்டுபிடிக்கவேண்டுமென்பதனால்தான் நான் இந்தத் திருத்தத்தைக் கொடுத்திருக்கிறேன்.

THE HON. SRI R. VENKATARAMAN : கனம் சபாநாயகர் அவர்களே, 10–10
பக்கத்திலே இருக்கும் ஆந்திர ராஜ்யத்திலும் மைசூர் ராஜ்யத்திலும் a.m.
இதற்கு அரை சதமானம் வரி என்று இருக்கிறது. ஆகவே, அரை சதமானம் என்று நாம் போட்டிருப்பதை உயர்த்தினால் புலியன் வியாபாரம் சென்னை

[Sri R. Venkataraman] [14th February 1959

ராஜ்யத்தைவிட்டு மற்ற இடங்களுக்குப் போய் விடும் என்பதில் சற்றும் சந்தேகம் இல்லை. வர்த்தகத்தை நம்முடைய ராஜ்யத்திலிருந்து பிற ராஜ்யங்களுக்கு விரட்டுவது விற்பனை வரியின் நோக்கம் அல்ல. விற்பனை நம்முடைய ராஜ்யத்தில் ஏராளமாக நடக்கவேண்டும் என்பதுதான் நம் முடைய நோக்கம்.

இரண்டாவது, கனம் அங்கத்தினர் திரு சட்டநாத கரையாளர் அவர்கள் பேசும்போது, பொய்க் கணக்கு வைத்து அவர்கள் செய்ய முடியும் என்று எடுத்துக்காட்டினார்கள். அதைச் சர்க்கார் பரிசீலனை செய்யும். தங்கம் கொடுத்தது என்று எழுதியிருந்தால், எப்பொழுது தங்கம் கொடுத்தார் கள், எங்கிருந்து கொடுத்தார்கள் என்று இப்பொழுதே கணக்குப் பார்த்து தப்பு செய்கின்றவர்களுக்கு இன்னும் அதிகமான வரி விதிக்கப்படுவதி னாலே அந்தத் தொல்லை அதிகமாக இருக்காது என்று நினைக்கிறேன். தவறு செய்கின்றார்கள் என்பதற்காக சட்டத்தைத் திருத்தி நம்முடைய ராஜ்யத்தில் வர்த்தகத்தையும் விற்பனையையும் குறைத்துகொள்ளக் கூடாது என்று நான் தெரிவித்துக்கொள்ளுகிறேன்.

*Sri A. GOVINDASAMY : சட்ட மன்றத் தலைவர் அவர்களே, வெஜி டபிள் ஆயில்களுக்குப் போட்டிருக்கும் விற்பனை வரியை அறவே நீக்க வேண்டும் என்று திருத்தம் கொடுத்திருக்கின்றேன். வெஜிடபிள் ஆயில் களுக்கு விற்பனை வரியிலிருந்து விலக்கு அளிப்பதன் மூலம் அரசாங்கத் திற்கு ஒரு நஷ்டமும் ஏற்படாது. ஆகவே, விதிவிலக்கு அளிக்கவேண்டும் என்று நான் கேட்டுக்கொள்ளுகிறேன்.

தென்னாற்காடு மாவட்டத்தில் மணிலா எண்ணெய் அதிகமாக உற் பத்தியாகும் பகுதிகள் இருக்கின்றன. மணிலா எண்ணெய்க்கு வரி அதிகமாகப் போட்டால் அந்தத் தொழிலிலே ஈடுபட்டிருக்கும் ஏழைகள் மிகவும் பாதிக்கப்படுவார்கள். நம்முடைய நிதி அமைச்சர் அவர்களுடைய பகுதியான பொள்ளாச்சியிலும் கடலை எண்ணெய் அதிகமாக உற்பத்தி ஆவதாலும், ஏழை எளியவர்கள் இதில் ஈடுபட்டிருப்பதாலும், வியாபாரிகள் தானே வரி கொடுக்கிறார்கள் என்று நினைக்காமல், வாங்குவோர்கள் தலையிலே வியாபாரிகள் வசூலித்துத்தான் இந்த வரியைக் கட்ட வேண்டிய நிலைமை இருப்பதாலும், இந்த எண்ணெய்களை ஏழைகள் உபயோகிப்பதாலும் மணிலா எண்ணெய்க்கு அறவே விதிவிலக்கு அளிக்க வேண்டும் என்பதுதான் என்னுடைய கோரிக்கை.

Sri M. SELVARAJ : கனம் சட்ட மன்றத் தலைவர் அவர்களே, நான் கொடுத்திருக்கும் திருத்தம், முதல் அட்டவணையில் 20–வது "ஐடம்" ஆக, வெஜிடபிள் ஆயில்களுக்கு மூன்று சத விகிதம் விற்பனை வரி போடப்பட்டிருப்பதை அறவே நீக்கவேண்டும் என்பதற்காகத்தான். நாம் 3 சதம் போட்டிருக்கிறோம். அண்டை ராஜ்யங்களிலே, குறிப்பாக ஆந்திர ராஜ்யத்திலே, 2 சத வரி ஒரே முனையில் போட்டிருக்கிறார்கள். ஏற்கனவே நமது அமைச்சர் அவர்கள் பேசியபோது, (புலியனுக்கு) பக்கத்து ராஜ்யங்களில் அரை சதவிகிதம் வரி விதிக்கும்போது நம்முடைய ராஜ்யத்தில் ஒரு சத விகிதம் வரி விதித்தால், நமக்குப் பாதகம் ஏற்படும் என்று தெரிவித்தார்கள். அதுபோன்று, அண்டை ராஜ்யத்திலே இத்தகைய வெஜிடபிள் ஆயில்களுக்கு இரண்டு சத விகிதம் வரி போட்டிருக் கும்போது, நாம் மூன்று சத விகிதம் வரி போட்டால், அதனால் நம் முடைய சென்னை மாநிலத்திலுள்ள அத்தனை எண்ணெய் வியாபாரி களும் பாதிக்கப்படமாட்டார்களா என்பதை அவர்கள் சற்று யோசித்துப் பார்க்கவேண்டும். அண்டை ராஜ்யங்களிலிருந்து தினசரி இப்பொழுது குறைந் தது பத்து, பதினைந்து லாரி லோட்கள் மதராஸ் மார்க்கெட்டுக்கு வந்து கொண்டிருக்கின்றன. 3 சதம் என்று போட்டிருப்பது அதிகப்படியாக பாதகம் விளைவிக்கும். ஆகவே, அண்டை ராஜ்யங்களிலுள்ள அளவுக்காவது இந்த வரி விகிதத்தைத் திருத்தவேண்டும் என்று நான் மதிப்பிற் குரிய அமைச்சர் அவர்களைக் கேட்டுக்கொள்ளுகிறேன்.

14th February 1959]

THE HON. SRI R. VENKATARAMAN : கனம் சபாநாயகர் அவர்களே, நிதி நிலைமை காரணமாக வரியை ரத்து செய்ய முடியாது என்பதை நான் பல முறை எடுத்துக்காட்டியிருக்கிறேன். கனம் கோவிந்தசாமி அவர்கள் அதை ரத்து செய்யவேண்டுமென்று சொல்லியிருப்பதை நான் ஏற்றுக்கொள்ளுவதற்கில்லை.

அடுத்தப்படியாக, இப்பொழுதிருக்கும் வரி இரண்டு சத விகிதம் "மல்டி பாயிண்ட்" முறையில். சாதாரணமாக, இரண்டு முறை கைமாறுகிறது என்று வைத்துக்கொண்டால்கூட 4 சத விகிதம் ஆகும். "ஸிங்கில் பாயிண்ட்" ஆக 3 சத விகிதம் செய்ததனால் வரி குறைக்கப்பட்டிருக்கிறது. இதைவிட இன்னும் குறைப்பதற்கு வசதி இல்லை என்று நான் தெரிவித்துக்கொள்கிறேன்.

MR. SPEAKER : Amendment No. 160. *(Sri A. Govindasamy rose).

கனம் அங்கத்தினர் ஸ்ரீ கோவிந்தசாமி அவர்கள் 163–வது திருத்தத்தில் 21–வது இடத்தை நீக்கிவிட வேண்டும் என்று கோரியிருக்கிறார். மற்ற சில கனம் அங்கத்தினர்களும் இதற்குத் திருத்தங்கள் கொடுத்திருக்கிறார்கள். கனம் அங்கத்தினர்கள் கொடுத்த திருத்தங்கள் 21–வது இடம் மட்டுமல்லாமல் மற்ற சில இடங்களையும் நீக்கவேண்டும் என்ற முறையில் பலவற்றை ஒன்றாகச் சேர்த்துக்கொடுக்கப்பட்டிருக்கின்றன. ஆனால், கனம் அமைச்சர் அவர்கள் 21–வது இடத்தை மட்டும் நீக்கவேண்டும் என்று திருத்தம் கொடுத்திருக்கிறார்கள். ஆகையால், அமைச்சர் அவர்கள்தான் 169–வது திருத்தத்தை பிரேரேபிக்கவேண்டும்.

The hon. Member has given notice of an amendment. The Government also have given notice of an amendment. This is a combined amendment. I leave it to the Minister.

THE HON. SRI R. VENKATARAMAN : Sir, I move the following amendment :—

Item 21 shall be *deleted* and the remaining items shall be re-numbered.

SRI A. GOVINDASAMY : Sir, I want to speak on this item. கனம் சட்ட மன்றத் தலைவர் அவர்களே, பிண்ணாக்கு மீது போட்டிருக்கும் வரியை ரத்துசெய்யவேண்டும் என்று நானும் நண்பர் திரு எம். செல்வராஜ் அவர்களும் திருத்தங்கள் கொடுத்திருக்கிறோம். அதே திருத்தத்தை கனம் அமைச்சர் அவர்களும் சர்க்கார்த் தரப்பிலேயிருந்து கொடுத்திருக்கிறார்கள்.

THE HON. SRI R. VENKATARAMAN : கனம் அங்கத்தினர் அவர்கள் தவறாக நினைத்துக்கொண்டிருப்பதால் அதை இப்போதே திருத்திவிடுவது நல்லது என்று நினைக்கிறேன். சர்க்கார்த் திருத்தம், பிண்ணாக்குகளுக்கு ஒரு முனை விற்பனை வரி போடாமல், பல முனை விற்பனை வரி போடவேண்டும் என்பதற்காக. ஆனால், கனம் அங்கத்தினருடைய திருத்தம், இதற்கே வரியே விதிக்கக்கூடாது என்பதற்காக. அதுதான் வித்தியாசம்.

SRI A. GOVINDASAMY : Item 21 shall be deleted.. என்றுதான் சர்க்காருடைய திருத்தத்திலும் இருக்கிறதே தவிர, அவர் சொல்கிற வியாக்கியானம் அதில் இல்லை என்பதை இங்கே குறிப்பிட விரும்புகிறேன்.

அந்த முறையிலே, அமைச்சர் அவர்கள், ஏழை விவசாயிகள் உபயோகிக்கும் பிண்ணாக்குக்கு வரி போடும்படியான நிலைமை ஏற்பட்டால் மிகுந்த பாதகத்தை விளைவிக்கும். விவசாய வருமான வரியும் போட்டுவிட்டு, அவர்கள் விவசாயத்திற்கு உபயோகப்படுத்தும் பிண்ணாக்குக்கும் வரி போடுவதினாலே அதிகம் பாதகமான நிலைமை ஏற்படும். அதற்கு விதிவிலக்கு

அளிக்கவேண்டும் என்று எதிர்த்தரப்பிலே இருக்கும் நாங்கள் சொல்வது மட்டும் அல்லாமல் சர்க்கார்த் தரப்பிலிருந்து பல உறுப்பினர்கள் இந்தக் கருத்தை வலியுறுத்திச் சொல்லியிருக்கிறார்கள் என்ற காரணத்தால், பிண்ணாக்கு மீது போட்டிருக்கும் வரியை ரத்து செய்யவேண்டும். அது போலவே விவசாயிகள் உபயோகிக்கும் ரசாயன உரங்களுக்கும் இந்த வரி விதிப்பிலிருந்து விலக்களிக்கவேண்டும். இந்த அரசாங்கத்திற்கு விவசாயிகளுடைய நலனில் அதிக அக்கறை காட்டி, உற்பத்தியை அதிகமாகப் பெருக்கவேண்டும், நாட்டில் சுபீட்சம் ஏற்படவேண்டும் என்பதிலே எண்ணம் இருக்குமானால், விவசாயிகளைப் பாதிக்காத அளவுக்கும், விவசாயிகளுக்கு நல்ல பாதுகாப்புத் தேடிக்கொடுக்கும் அளவுக்கும் இந்த வரியையும் ரத்து செய்யவேண்டும் என்று நான் கேட்டுக்கொள்கிறேன்.

THE HON. SRI R. VENKATARAMAN : கனம் சபாநாயகர் அவர்களே, இந்தப் பிரச்னைகளைப்பற்றி சட்டசபையில் விவாதிக்கும்போது இரண்டு அபிப்பிராயங்கள் முன்வருகின்றன. சர்க்கார் முதன் முதலில் இதற்கு மூன்று சத விகிதம் ஒரு முனையில் வரி விதிப்பதற்குக் காரணம், பிண்ணாக்கு குறைந்த பட்சம் இரண்டு மூன்று கை மாறுகிறது. கடைசியாக அதை உபயோகிக்கின்றவர்கள், இது இரண்டு மூன்று கை மாறினால், 6 சத விகிதம் அல்லது குறைந்த பட்சம் 4 சத விகிதமாவது வரி கொடுக்க வேண்டியிருக்கிறது. அதைக் குறைக்கவேண்டும் என்ற நோக்கத்துடன் 3 சதவிகிதம் வரி என்று போட்டிருக்கிறோம்.

ஆனால், சட்டசபையில் எல்லோரும் பத்தாயிரம் ரூபாய்க்குக் குறைவாக இருப்பவர்களுக்கு வரி விலக்கு கிடைக்கவில்லை, அதனால் அதை மாற்றவேண்டும் என்று சொன்னவுடன் சட்டசபை அபிப்பிராயத்தை ஏற்று நாம் அதைப் பல கட்ட வரியாக மாற்றினோம். அவ்வாறு மாற்றியதனால் சலுகை என்ன கிடைக்கிறதென்றால், பத்தாயிரம் வரையிலும் வியாபாரம் செய்கின்ற சிறு பிண்ணாக்கு வியாபாரிகள், சிறிய எண்ணெய்ச் செக்குகளை வைத்துக்கொண்டிருக்கிறவர்கள், இவர்களுக்கு ஓரளவு நன்மை கிடைக்கிறது. அவர்களுக்கு நன்மை கிடைக்கவேண்டும் என்பதற்காகத்தான் அது மாற்றப்பட்டது. ஆகவே, இதை முழுதும் ரத்து செய்வதற்கில்லையென்பது என்னுடைய சொந்த அபிப்பிராயம். 3 சதவிகிதம்தான் மக்களுக்கு நல்லது, ஏழை மக்களுக்கு நல்லது, செக்கு வைத்துக்கொண்டிருப்பவர்களுக்கும் நன்மை என்று சட்டசபையினர் சொன்னதினால் அதை ஏற்றுக்கொண்டிருக்கிறேன். இதில் வேறு எந்த மாறுதலும் செய்வதற்கில்லை.

SRI A. GOVINDASAMY : Sir, I want an explanation.

MR. SPEAKER : நீங்கள் சொல்லவேண்டியதையெல்லாம் ஒரேயடியாக Speech யிலேயே சொல்லிவிடுங்கள். அமைச்சர் பேசின பிறகு பேசக்கூடாது. The hon. Member cannot speak again. I told Sri Lazar yesterday. How can the hon. Member speak now ? He cannot.

*SRI N. K. PALANISAMI : கனம் சபாநாயகர் அவர்களே, 21–வது நம்பரில் பிண்ணாக்குகளுக்கு மூன்று சத விகிதம் வரி என்று இருப்பதை ஒரு சத விகிதம் என்று குறைக்கவேண்டும் என்பது என்னுடைய வேண்டுகோள். 22–வது நம்பரில் விவசாயத்திற்கு உபயோகிக்கக்கூடிய உரங்களுக்கு கண்டிப்பாக வரி இருக்கக்கூடாது. அப்படி இருக்கவேண்டும் என்று சர்க்கார் விரும்புவார்களானால், ஒரு சத விகிதம்தான் போட வேண்டும் என்பது என்னுடைய கோரிக்கை. 23–வது நம்பரில் கண்டிருக்கும் பொருள்களுக்கு மூன்று சத விகிதம் வரி போட்டிருப்பதற்குப் பதிலாக 7 சத விகிதம் அளவுக்கு வேண்டுமானால் உயர்த்திவிடலாம். 25–வது நம்பரில் கண்டுள்ள "மில்க் புட்ஸ் (எக்ஸ்க்ளூடிங் ப்ரெஷ் மில்க்) பட் இன்க்ளூடிங் மில்க் பவுடர்" என்பதற்கு 3 சத விகிதத்திற்குப் பதிலாக இன்னும் 4 சத விகிதம் அதிகமாகப் போடுவதால் ஒன்றும் கெடுதல் ஏற்பட்டு விடாது. ஏனென்றால், அவை வெளிநாடுகளிலிருந்து இறக்குமதியாகக் கூடிய பொருள்கள். மரம், மூங்கில் இவைகளுக்கு 3 சதவிகிதம் போடப்பட்டி

ருக்கிறது. இது மிகவும் அதிகம். அவற்றிற்கு 1 சதவிகிதம் போடவேண்ம். 1 சதவிகிதம் போடா விட்டால் அதிகமான ஜனங்களைப் பாதிக்கும். பிஸ்கட், கேக் இவைகளுக்கு இன்னும் இரண்டு சத விகிதம் சேர்த்து 5 சத விகிதமாகப் போடலாம். ப்ரெஷஸ் ஸ்டோன்ஸ், வைரம் முதலியவைகளுக்கு போடப்பட்டிருக்கும் வரி 3 சதவிகிதம். அது குறைவாகத்தான் இருக்கிறது. அதை இன்னும் உயர்த்தி 7 சதவிகிதமாகப் போடலாம். காப்பிக்கு 5 சத விகிதம் போட்டிருக்கிறது. அதை 3 சதவிகிதமாக் குறைக்கலாம். ப்ரெஞ்ச் காப்பிக்கு அதிகம் வரி விதிக்கலாம். சிமெண்ட், சாதாரணமாக எல்லோரும் உபயோகிக்கக்கூடியது. அதற்கு கொஞ்சமாக வரி போட்டாலும், அதிகப் படியாக சேர்த்து விற்கக்கூடிய காரணத்தால் 5 சதவிகிதத்துக்குப் பதிலாக 3 சதவிகிதம் போடவேண்டும் என்பது என்னுடைய திருத்தம்.

சோப்புக்கு 5 சத விகிதம் போடப்பட்டிருக்கிறது. வாஷிங் சோப்புகளுக்கு 2 சத விகிதம் போடவேண்டும். பாக்கி சோப்புகளுக்கெல்லாம் வேண்டுமானால் 5 சத விகிதம் இருக்கலாம். வாஷிங் சோப்புகளுக்கு அவசியம் குறைந்த அளவில் 2 சத விகிதம்தான் போடவேண்டும் என்பது என்னுடைய திருத்தத்தின் நோக்கம். இன்னும் சிமெண்டுக்கு 6 சத விகிதம் போடப்பட்டிருக்கிறது, அதை 10 பர்செண்டுக்கு உயர்த்தலாம். அடுத்தபடியாக மடக்கக்கூடிய குடைகளுக்கு 6 பர்செண்ட் போடப்பட்டிருக்கிறது. சாதாரணமாக ஏழைகள் எல்லாரும் உபயோகிக்கக்கூடிய பொருள் இது. அதை 6 பர்செண்டிலிருந்து 3 பர்செண்டாக குறைக்கலாம். ஆகவே சில இடங்களில் அவசியமான பண்டங்களுக்கு குறைத்தும், அநாவசியமான பண்டங்களுக்கு வரியை அதிகப்படுத்தியும் போடலாம். சர்க்காருக்கு வருமானம் குறையாத அளவில் இப்படிப்பட்ட திருத்தங்கள் கொடுக்கப்பட்டிருக்கின்றன. அதையெல்லாம் கனம் அமைச்சர் அவர்கள் ஆலோசனை செய்து அவைகளை ஏற்றுக்கொள்ள வேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன்.

* **Sri A. V. P. ASAITHAMBI** : சட்ட மன்றத் தலைவர் அவர்களே, ஐடம் 32 சிக்கரியைப்பற்றி இரண்டொரு வார்த்தைகளை மட்டும் சொல்லிக் கொள்ள ஆசைப்படுகிறேன். சிக்கரிக்கு ஒரு முனை வரி 5 பர்செண்ட் விகிதம் வரி விதிக்கப்பட்டிருக்கிறது. சிக்கரி அந்நிய நாட்டிலிருந்து நம் நாட்டிற்கு இறக்குமதி செய்யப்பட்டு வருகிறது. அதை காபியுடன் கலந்தால் அதற்கு ஒரு தனி ருசி இருப்பதால் அதை அதிகமாக உபயோகிக்கிறார்கள். ஹாலண்ட், பெல்ஜியம் போன்ற அந்நிய நாடுகளிலிருந்து இந்தியா பூராவுக்கும் கோடிக்கணக்கான ரூபாய் அளவில் இறக்குமதி செய்யப்படுகிறது. அதனால் அந்நிய செலாவணி கூட அதிகப் படியாக பாதிக்கப்படுகிறது. நம்முடைய இந்தியாவிலேயே அதை உற்பத்தி பண்ணுவதற்கு நடவடிக்கை எடுத்துக்கொள்ளப்பட்டிருக்கிறது. மலைப் பகுதிகளில் சிக்கரி பெருவாரியாக பயிர் செய்கிறார்கள். இந்த ஆண்டு அது நமக்கு பலன் தர இருக்கிறது. ஆகவே தென்னாட்டைப் பொறுத்த வரையில் சிக்கரி உற்பத்தி செய்யப்பட்டு அதிகப்படியாக வருவதற்கு இடம் இருக்கிறது. அந்நிய நாட்டிற்கும் கொடுக்கக்கூடிய அளவுக்கு நாம் பயிர் செய்வதற்கு வசதி இருக்கிறது. அதனால் அந்நிய நாட்டிலிருந்தே சிக்கரியை தருவிப்பதற்கு அவசியம் இல்லாமலேயே போய், நாமே அந்நிய நாட்டிற்கு ஏற்றுமதி செய்யக்கூடிய நிலைமை ஏற்படுவதற்கும் இடம் இருக்கிறது. அதனால் இந்த சமயத்தில் சிக்கரிக்கு [illegible] பர் செண்ட் வரி போடுவது என்பது சரியல்ல. அப்படிப் போட்டால் உற்பத்தியை அதிகப்படியாக ஊக்குவிக்க முடியாமல் இருக்கலாம். அதன் பிறகு நாம் அந்நிய நாட்டிற்கு அதை ஏற்றுமதி செய்து நமது அந்நிய நாட்டு செலாவணியைப் பெருக்கிக் கொள்வதற்கு நல்ல வசதி ஏற்பட இடம் இருக்கிறது. அதன் மீது அதிகப்படியாக வரியை விதித்தால் ஒருக்கால் அதன் உற்பத்தி பாதிக்கலாம், அதன் மேல் வியாபாரிகளிடமிருந்து வசூலிக்க முடியாமல் போய் விடலாம். அதனால் இந்த நேரத்தில் அதற்கு அதிகப்படியான வரியை விதிப்பது என்பது சரியல்ல. ஆகவே உள் வியாபாரிகள் அந்நிய நாட்டிலிருந்து இறக்குமதி செய்வதற்கு இடம் கொடுக்காமல் நாம் உற்பத்தி செய்யக்கூடியதையே வாங்கி விற்பதற்கு

[Sri A. V. P. Asaithambi] [14th February 1959

வசதி கொடுக்கும் அளவில் இதற்கு அதிகப்படியான வரியை விதிக்கக் கூடாது என்றும் அதன் வியாபாரத்தை அதிகப்படியாக ஊக்குவிக்க வசதி செய்து கொடுக்கவேண்டும் என்றும் அதற்கு வேண்டிய வழி செய்து தரவேண்டும் என்றும் தாழ்மையுடன் கேட்டுக்கொள்ளுகிறேன்.

* THE HON. SRI R. VENKATARAMAN : கனம் சபாநாயகர் அவர்களே, இந்த ஷெட்யூல் கமிட்டியின் முன்னால் சுமார் ஒரு வருஷம் பூராவும் பரிசீலனை செய்யப்பட்டது. கனம் பழநிசாமி அவர்கள் விற்பனை அடிப்படையில் அவைகளையெல்லாம் குறைக்கவேண்டும் என்று ஆலோசனை கூறிக்கொண்டிருக்கிறார். லக்ஷரி பண்டங்களை உபயோகப்படுத்தக் கூடாது என்பதற்காக விற்பனை வரி போடப்படுவது என்பது அல்ல. அல்லது லக்ஷரி பண்டங்களை உபயோகப்படுத்துவதைக் கட்டுப்படுத்தவேண்டும் என்பதற்காக விற்பனை வரி போடப்படுவது இல்லை. நம்முடைய ராஜ்யத்தில் விற்பனை சரியாக நடைபெறுவதற்கும், நம்முடைய ராஜ்யத்திலுள்ள வியாபாரம் மற்ற இடங்களுக்கு மாறக்கூடாது என்ற முறையிலும் தான் இந்த விற்பனை வரி விதிக்கப்படுகிறது. நம்முடைய ராஜ்யத்திலிருந்து மைசூருக்கோ அல்லது ஆந்திராவுக்கோ போகக்கூடாது என்பதற்காகத்தான் இங்கே அந்தந்த வியாபாரப் பொருள்களுக்குத் தகுந்தாற்போல் விற்பனை வரி விதிக்கப்படுகிறது. அந்தந்த பொருள்களுக்கு அந்தந்த வரம்புகளுக்குட்பட்டு வரி போட்டு பணம் வசூலிக்க வேண்டியதாக இருக்கிறது. வரம்புக்குட்பட்டு வசூல் பண்ணவேண்டுமேயல்லாமல் மற்ற வரிகளைப்போன்று இதை வசூலிக்கக்கூடாது. அதற்கு மற்ற வரிகளை உபயோகப்படுத்திக்கொள்ளலாம். லக்ஷரி பண்டங்களுக்கு அதிகப்படியாக வரி விதிக்க வேண்டும் என்று சொன்னால் நம் ஊரிலிருந்து அந்த வியாபாரம் மற்ற ராஜ்யங்களுக்குப் போய் விடுவதற்கு வசதி ஏற்பட்டு விடும். அதனால் நம்முடைய வியாபாரிகள் நசித்துப்போய்விடுவார்கள். அதனால் அதை உயர்த்துவதற்கு சர்க்காருக்கு எவ்வளவு அநுகூலம் இருந்தாலும்கூட அதை ஏற்றுவது இயலாது. அதைப்போலவே குறைக்க வேண்டிய பொருள்களுக்கு எல்லாம் வேண்டிய அளவும் குறைக்கப் பட்டிருக்கிறது என்பதையும் வற்புறுத்திச் சொல்லிக்கொள்ள விரும்புகிறேன்.

சாதாரணமாக பல கட்ட வகையில் மூன்று ட்ரான்சாக்ஷன்கள் இருக்கின்றன என்பதை எல்லோரும் ஒத்துக்கொண்டிருக்கிறார்கள். அவ்வாறு மூன்று ட்ரான்சாக்ஷனிலும் 2 பர்செண்ட், 2 பர்செண்ட், 2 பர் செண்ட் ஆக 6 பர் செண்ட் என்று ஆகிவிடும். அதை இப்பொழுது குறைத்திருக்கிறோம். அதைவிட இன்னும் குறைக்க இயலாது என்பதை மட்டும் தெரிவித்துக்கொள்ளுகிறேன்.

அடுத்தபடியாக சிக்கரியைப்பற்றி குறிப்பிட்டார்கள். இன்றைய தினம் காபியுடன் சிக்கரியைக் கலந்து விற்கிறார்கள். சிக்கரி ஒரு சாதாரண பண்டமாக இருந்தாலும் கூட அதை காபியுடன் கலந்து விற்பதால் காபியின் விலையையே வைத்து விற்கிறார்கள். இதை காபியுடன் சேர்த்து விட்டால் காபியின் விலை என்னமோ அதையே இதற்கும் வைத்து விற்கிறார்கள். அதைப்போலவே ப்ரெஞ்சு காபியுடனும் சேர்த்து விற்கும் போது அதிகப்படியான விலைக்கு விற்கிறார்கள். பாதி காபி, பாதி சிக்கரியாக இருந்தாலும் பூராவிலையும் காபியின் விலைக்கே விற்கப்படுகிறது. அதனால் அதற்கு விற்பனை வரி போட்டால் எந்த விதமான கஷ்டமும் வராது என்று சொல்லிக்கொண்டு இந்த ஷெட்யூலை ஏற்றுக்கொள்ள வேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன்.

ஐட்டம் 21-ஐ நீக்கி விட வேண்டும் என்று நான் ஒரு திருத்தம் கொடுத்திருக்கிறேன். அதாவது ஒரு கட்ட முனை வரி 3 பர்செண்ட் என்று விதிப்பதற்கு பதிலாக, இப்பொழுது இருக்கக்கூடிய பில்லில் இருக்கக்கூடியது போலவே, பல கட்ட முனையில் அதாவது 2 பர்செண்டாகவே இருக்கும் என்பதுதான்.

14th February 1959]

SRI S. LAZAR : On a point of order, Sir, பரிசீலிக்கப்படுகிற ஒவ்வொரு பகுதியைப்பற்றியும் திருத்தங்கள் கொடுத்தவர்கள் மட்டும் தான் பேச வேண்டுமா ? சில முக்கியமான விஷயங்களை அரசாங் கத்தின் கவனத்திற்குக் கொண்டுவர பல அங்கத்தினர்கள் ஆசைப்படு கிருர்கள். அவர்கள் பேசுவதற்கு பின்னுல் சான்ஸ் கொடுக்கப்படுமா என்பதைப்பற்றி தெரிந்துகொள்ள விரும்புகிறேன்.

MR. SPEAKER : திருத்தங்களைப்பற்றி பேசின பிறகு நீங்கள் பேசலாம்.

* SRI S. M. ANNAMALAI : சட்ட மன்றத் தலைவர் அவர்களே, கனம் அமைச்சர் அவர்கள் பேசும்போது சட்ட மன்ற உறுப்பினர்கள் இந்த பிண்ணுக்குக்குப் போடப்பட்ட வரியை தள்ளிவிட வேண்டும் என்று சொன்னதாகச் சொன்னுர். பல முனை வரி வேண்டுமென்று சட்ட மன்ற உறுப்பினர்கள் கேட்கவில்லை. பிண்ணுக்கு மீதுள்ள வரியை அடியோடு ஒழிக்கவேண்டும் என்றுதான் கூறினுர்கள். சென்ற நான்கு மாதங்களை எடுத்துக்கொண்டால் ஒரு மூட்டை பிண்ணுக்கின் விலை ரூ. 17-5-0 ஆக இருந்தது. இப்பொழுது அதன் விலையை எடுத்துப் பார்த்தால் ஒரு மூட்டையின் விலை ரூ. 20-10-0 ஆக விற்கப்படுகிறது. சுமார் நான்கு ரூபாய் அளவிற்கு உயர்ந்திருக்கிறது. அந்நிய செலாவணியும் பாதிக்கப் படுகிறது என்று சொல்லி மணிலாப்பயிறு வெளி நாட்டிற்கு அனுப்புவதன் காரணமாக அதன் விலை மேலும் மேலும் அதிகரித்துக்கொண்டே இருக் கிறது. அதனுல் பிண்ணுக்கின் விலையும் உயர்ந்து கொண்டே இருக்கிறது. இப்பொழுது அதற்கு வரி விதிக்காமல் விட்டு விட்டு பின்னுடி ஒரு மூட்டை யின் விலை ரூபாய் 10 அல்லது 12 என்று விற்கப்பட்டால் அப்பொழுது வேண்டுமானுல் வரி விதித்துக்கொள்ளலாம். அப்பொழுது சேர்த்துக் கொள்ள வேண்டிய அவசியம் ஏற்பட்டால் சேர்த்துக்கொள்ளலாம். பிண் ணுக்கு மாட்டுக்கு தீவனமாக இருப்பதோடுகூட அதை விவசாயத்திற்கும் உபயோகப்படுத்துகிருர்கள். பிண்ணுக்குக்கு மேலும் மேலும் வரி போட்டுக் கொண்டிருந்தால் விலை உயர்ந்து விவசாயம் பயன் அடையாது. அதனுல் பிண்ணுக்குக்கு இருக்கிற வரியை அடியோடு தள்ளிவிட வேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன்.

MR. SPEAKER : Does the Hon. Minister want to reply ?

THE HON. SRI R. VENKATARAMAN : I have already stated that it is not possible to reduce the tax on these items.

SRI T. S. RAMASWAMY PILLAI : பிண்ணுக்கு விவசாயத்திற்கு அத்யாவசியமான பொருள். இதற்கு என் வரி விதிக்க வேண்டும், என் இதற்கு வரி போடுகிருர்கள் என்பது தெரியவில்லை. ஒரு பக்கம் உணவு உற்பத்தியைப் பெருக்கவேண்டும் என்று சொல்லி விட்டு, அதற்கு உபயோககரமாக இருக்கும் உரத்திற்கு வரி விதிப்பது என்பது சரியல்ல. அப்படி வரி போடுவதால் விவசாயம் ஒரு விதத்தில் பாதிக்கப் படலாம். இவைகளுக்கு வரி போடுவதால் உணவு தானியங்களில் விலை கூட உயரலாம். நாம் உணவு தானியங்களுக்கும் வரி போடுகிறோம், உரத் திற்கும் வரி போடுகிறோம். இப்படி ஒவ்வொன்றுக்கும் வரி போட்டுக் கொண்டே இருந்தால் உணவு தானியங்களின் விலை இன்னும் அதிக மாக உயர்ந்து கொண்டே போவதற்கு இடம் ஏற்படும்.

அடுத்தப்படியாக பல ராஜ்யங்களில் உரம் போன்ற கெமிகல் உரங் களுக்கு சப்சிடி கொடுக்கிருர்கள். (கனம் ஸ்ரீ சி. சுப்பிரமணியம் : உரத்தை உபயோகப்படுத்திக்கொள்ள தெரியவில்லை என்ருல் அதற்கு சப்சிடி கொடுக்கிறோம்.) ஆனுல் நம்முடைய ராஜ்யத்தில் அவைகளுக்கு வரி போடுகிருர்கள். சப்சிடி கொடுக்காமல் இருப்பதோடல்லாமல் வரியும் போடுகிருர்கள். ஆகையினுல் எவ்வளவு தூரம் இதற்கு ஊக்கம் கொடுக்க முடியுமோ அவ்வளவு தூரம் ஊக்கம் கொடுக்க முன் வரவேண்டும் என்று கேட்டுக்கொண்டு நான் இத்துடன் என் பேச்சை முடித்துக்கொள்ளுகிறேன்.

[14th February 1959

MR. SPEAKER : Does the Hon. Minister want to reply to the discussion on the amendments to items 21 and 22 ?

THE HON. SRI R. VENKATARAMAN : Sir, I have already stated that it is not possible to reduce the level of taxation on these items.

SRI M. S. SELVARAJAN : சார், விறகு, கரி ஆகியவற்றிற்கு ஒரு
0 30 a.m. முனை வரி விதிக்க வேண்டுமென்றுதான் டாக்டர் லோகநாதன் அவர்கள் ரிப்போர்ட்டில் சிபாரிசு செய்யப்பட்டிருந்தது. செலக்ட் கமிட்டியில் ஏற்கனவே இருந்ததுபோல் பல கட்ட விற்பனை வரி கொடுத்தால் 2 சத விகிதம் வாங்கிவிட்டால் நல்லது என்று நினைத்து அந்த விதத்தில் பல கட்ட விற்பனை வரி விதிக்கப்படவேண்டுமென்று திருத்தப்பட்டிருக்கிறது. சென்னை நகரத்தைப் பொறுத்தமட்டில் ஏறத்தாழ மூவாயிரம் வியாபாரிகள் வரை இந்தத் துறையில் இருக்கிறார்கள். கரி வியாபாரிகளில் பலருக்கு விலக்கு இருப்பதாகத் தெரிகிறது. அமைச்சர் அவர்கள் சொல்லிய அபிப்பிராயப்படி பல கட்டத்தில் 3 சத விகிதம் ஒரு முனை வரிக்குப் பதில் 2 சத விகிதம் வரி வருகிற போது ஏழை எளியவர்கள் விலக்குப் பெறுகிறார்கள். பத்தாயிரம் வரை விலக்கு இருப்பதால் பெரும்பாலோருக்கு இந்த அனுகூலம் கிடைக்கலாம் என்ற அபிப்பிராயத்தைத் தெரிவித்தார்கள். கரியைப் பெரும்பாலும் வசதி உள்ளவர்கள்தான் வாங்கி உபயோகிப்பதாகத் தெரிகிறது. பெரும்பாலும் ஏழை மக்களும் பாமர மக்களும் விறகுதான் உபயோக்கிக்கிறார்கள். 100-க்குத் 90 வியாபாரிகள் இந்தப் பத்தாயிரம் வரை விலக்குப் பெறுமலேயே வரி செலுத்தும் நிலைமையில்தான் இருக்கிறார்கள். பலகட்ட விற்பனை வரி விதிக்கப்படுவதால் கமிஷன் வியாபாரி முதலிலே 2 சதவிகிதம் கட்ட வேண்டும். பின்னர் அதை வாங்கும் வியாபாரி ஏறத்தாழ 100-க்கு 90 பேர் 2 சதவிகிதம் செலுத்த வேண்டும். ஆக இந்த இனத்தில் இரண்டும் இரண்டும் நான்கு சதவிகிதம் வரியாகச் செலுத்துவதோடு இதில் ஈடுபட்டிருக்கக்கூடிய சிறு வியாபாரிகள் கணக்கு வைத்துக் கொள்ளச் சிரமங்கள் ஏற்படும். ஒரு முனை வரியாக மாற்றி விடுவதன் காரணமாகச் சிறு வியாபாரிகளுக்குச் சிரமத்தைப் போக்க முடியும். மேலும் ஒரு முனை வரியாக வசூலிக்கும் போது 100-க்கு 100 கரி, விறகு ஆகியவைகளுக்கு வசூல் செய்வதனால் அரசாங்கத்திற்கு அதிகப்படியான வருமானம் வரும் என்று கணக்கியப் பட்டிருக்கிறது. வருமானத்தைக் கூட கருதாமல் பல கட்டத்தில் வசூலிப்பதன் மூலமாக ஓரளவு ஏழை எளியவர்கள் விலக்குப் பெறுகிறார்கள் என்பதால் பல கட்ட விற்பனை வரி விதிக்கப்பட்டிருக்கிறது என்று சொல்லப் பட்டது. நான் விசாரித்த அளவில் ஏழை எளியவர் மீது இரண்டு கட்டத்தில் இந்த வரி சுமத்தப்படுகிறது என்பதுதான். இரண்டும் இரண்டும் நான்கு ரூபாய் நூற்றுக்கு அவர்கள் கொடுத்தால்தான் கரியோ விறகோ அவர்கள் வாங்கக் கூடிய நிலைமை இருந்து வருகிறது. ஆகவே ஒரு முனை வரியாக இதை ஆக்குவதன் மூலமாக ஒரு பக்கம் அரசாங்கத்துக்கு வருமானம் அதிகரிப்பதோடு 100-க்கு 90 வியாபாரிகள் இந்த சிரமங்களிலிருந்து விடுபடலாம். இதை மீண்டும் பரிசீலனை செய்து என்னுடைய திருத்தத்தை ஏற்றுக்கொள்வதின் மூலமாக ஆரம்பத்தில் செய்யப்பட்ட வரி ஏற்பாட்டுக்கு இணங்க, அரசாங்கம் சென்ற வருஷம் எப்ரல் மாதத்தில் முடிவு செய்ததற்கு இணங்க, பின்னர் ஆகஸ்ட், செப்டம்பர், நவம்பர் ஆகிய மாதங்களில் வர்த்தகர் பிரதிநிதிகளுக்கு அமைச்சர் அவர்கள் கொடுத்த வாக்குறுதிக்கு இணங்க ஒரு கட்டத்திலேயே வரி வசூலிப்பதன் மூலமாக ஏழை எளியவர்களுக்கு நல்லது செய்ததாக இருக்கும் என்று குறிப்பிட விரும்புகிறேன்.

MR. SPEAKER : The Hon. Minister can reply to the discussion on the amendment to item 27, if he wants.

14th February 1959]

THE HON. SRI R. VENKATARAMAN : கனம் சபாநாயகர் அவர்களே, இரண்டு அபிப்பிராயங்கள் சில பண்டங்கள் விஷத்தில் நிச்சயமாக இருக்கிறது. ஒரு அபிப்பிராயம் சிறு வியாபாரிகளுக்குச் சலுகை காட்டவேண்டும் என்பது. மற்றொரு அபிப்பிராயம் இதில் ஒரு முனை வரி விதித்தால் சில நன்மைகள் இருக்கும் என்பது. இந்த இரண்டையும் சேர்த்து ஒரு திட்டத்தில் கொண்டு வர முடியாது. சிறு வியாபாரிகளுக்கு சலுகை அளிக்கவேண்டுமென்றால் 10 ஆயிரம் வரை விலக்கு அளிக்கவேண்டும். ஒரு முனை வரி மூலமாக விற்பனைத் தொல்லைகள் தீர வேண்டுமென்று சொன்னால் எந்த விதி விலக்கும் இல்லாமல் எல்லா விதத்தில் இருந்தும் ஒரு முனை வரி வசூலிக்க வேண்டும். ஸ்ரீ செல்வராஜ் அவர்கள் ஒரு முனை வரி விதிக்க வேண்டுமென்று சொல்லுகிறார்கள். செலக்ட் கமிட்டியில் பல கட்ட விற்பனை வரி விதிக்க வேண்டுமென்று சொன்னார்கள். என்னைப் பொறுத்தவரையில் என்னுடைய எண்ணம் என்னவென்றால் இப்பொழுது இருக்கக்கூடிய திட்டத்திற்கு ஆதரவு இருக்குமானால் இதை அப்படியே வைத்துக்கொள்ளலாம். இதை நன்றாக ஆராய்ந்து இதில் மாறுதல் செய்யவேண்டுமென்பதற்கு எல்லோரும் ஒத்துக்கொண்டால் மாற்றி விடலாம். சர்க்காரைப் பொறுத்த வரையில் ஒரு முனை வரி விதித்தாலும் சரி, பல கட்ட விற்பனை வரி விதித்தாலும் சரி, சர்க்காருக்கு வரக்கூடிய வருமானம் ஒன்றுதான். கமிட்டியின் அபிப்பிராயப்படி செய்த முடிவை மாற்றுவதற்கில்லை என்று நான் தெரிவித்துக்கொள்ளுகிறேன்.

SRI T. T. DANIEL : Sir, Members who have not given notice of amendments may also be allowed to speak on the items.

MR. SPEAKER : But the difficulty is this. I have gone to item 27. The Hon. Minister has replied. If you are going to discuss items 20 and 21, it will mean a repetition of the arguments. So, hereafter I will allow any member, who has not given notice of an amendment, to speak if he wants to speak. Then I will call the Hon. Minister to reply to the discussion.

SRI S. LAZAR : இந்த 27-வது ஐடத்தில் கண்டிருக்கிற "All kinds of wood and timber . . and similar articles (excluding firewood and charcoal) என்பது ஒரு முனை வரிக்கு உட்படுத்தப்படும் என்று குறிப்பிட்டு இருப்பதில் ஒரு பெரிய கஷ்டம் இருக்கிறது என்பதை அரசாங்கத்தின் கவனத்திற்குக் கொண்டு வர விரும்புகிறேன். அவர்கள் ஏற்கனவே சொல்லி இருப்பது போலவே விறகு, கரி போன்றவைகளுக்கு பல கட்ட விற்பனை வரி விதிப்பதன் காரணமாக பத்தாயிரம் ரூபாய்க்கு அதிகப்படியாக வியாபாரம் செய்யக்கூடியவர்கள்தான் வரி கட்ட வேண்டி இருக்கும். இது சிறு வியாபாரிகளைப் பாதிக்காது. இந்த முறையில் இது அமைந்திருப்பதால் எந்த விதமான கஷ்டமும் இருக்காது. ஆனால் இந்த மரம் முதலியவைகளுக்கு ஒரு முனை வரி விதிக்க வேண்டும் என்றிருக்கிறது. சாதாரணமாக கிராமத்தில் மரங்கள் வாங்குகிறோம். ஏதோ பெரிய தோட்டங்கள் வைத்து பெரும் அளவுக்கு வியாபாரம் செய்யக்கூடிய வியாபாரிகளை மனதில் வைத்துக்கொண்டு இந்த "ஐடம்" தயாரிக்கப்பட்டிருப்பதாகத் தெரிகிறது. இது சாதாரணமாக நடக்கக்கூடிய காரியமாகும். கன்னியாகுமரி பகுதியில் தேக்கு மரங்கள், இன்னும் மற்றப் பகுதிகளில் வேப்ப மரம், மா மரம் போன்றவைகள் விற்கப்படுகின்றன. இந்தச் சட்டத்தை அமுல் நடத்தும் போது அவர்கள் ஒவ்வொருவரும் வரி கொடுக்கவேண்டுமென்று ஏற்படுகிறது. ஆகவே இதைப் பல முனைவரி என்று மாற்றி விடுவோமானால் சௌகரியமாக இருக்கும். ஆகவே இதைப் பல முனை வரியாக மாற்ற வேண்டுமென்று நான் தெரிவித்துக்கொள்ளுகிறேன். ஸ்ரீசெல்வராஜ் அவர்கள் பேசியது ஒன்று. அவர் கொடுத்திருக்கக்கூடிய திருத்தத்தின் வாசகம் ஒன்று. இப்பொழுது இருக்கக்கூடிய கரி, விறகு வியாபாரம் செய்கின்றவர்களுக்கு வரி இல்லை. அந்த மாதிரி இருக்கவேண்டுமென்று நினைத்தால் அவைகளுக்கு பல முனை வரி இருப்பதுதான் நல்லது.

[Sri S. Lazar] [14th February 1959

மேலும் இந்த "**Wood and timber**" க்கும் பல முனை வரியாக இருந்தால் தொல்லை இல்லாமல் இருக்கும் என்பது என்னுடைய தாழ்மையான அபிப்பிராயம்.

**Sri T. T. DANIEL** : Sir, I endorse fully the views expressed by my hon. Friend Sri Lazar. The price of wood and timber is very high. Perhaps we are purchasing wood and timber at high rates. I think the price of wood and timber is at the maximum in the market. Considering the price of these things in the last 10 or 12 years, I can very well say that it is very high now. If the Government were to levy the tax at the rate of 3 per cent, it will really be a burden to all the purchasers and the traders. As the provisions now stand, even when small landowners sell the timber got from their garden lands, the purchasers will have to pay the sales tax as they also come within the purview of this Bill.

As regards the suggestion made by Sri Selvaraj, I think he is correct. I would suggest that the Hon. Minister will agree to his suggestion. So far as firewood and charcoal are concerned, instead of having the proposed taxation, it would be better to have the former principle so that the poor people may not be affected.

* **The Hon. Sri R. VENKATARAMAN** : சார், இந்த ஷெட்யூலில் இருக்கிறதை விசாரணை செய்யும்போது எனக்கு ஒரு கதை ஞாபகம் வருகிறது. "**The old man, his son and the ass**" என்று கதை சொல்வார்கள். "கிழவன் கழுதைமேல் தன் மகனை ஏற்றி அழைத்துக்கொண்டு சந்தைக்குப் போகும்போது 'இது என்ன அநியாயம். பையன் நடக்கலாம். கிழவர் நடந்து போகிறாரே. இவர் கழுதைமேல் போனால் என்ன ?' என்று நடுவில் ஒருவர் சொன்னாராம். உடனே பையன் கீழே இறங்கி கிழவரை கழுதை மேல் ஏற்றி அழைத்துக்கொண்டு போகும்போது நடுவில் ஒரு பெண் வந்தாள். 'வயதானவர் கழுதை மேல் ஏறிக்கொண்டு பிள்ளையை நடத்தி அழைத்துப் போகிறாரே. அவர் இறங்கிக்கொண்டு பிள்ளையை அல்லவா ஏற்றிக்கொண்டு போகவேண்டும்' என்றாளாம். இரண்டு பேருமே ஏறிபோகும் போது ஜீவகாருண்யம் மிக்க ஒருவர் இப்படிக் கழுதைக்குத் தொந்தரவு அளிக்கலாமா. இந்த இரண்டுபேரும் அதைத் தூக்கிக்கொண்டு போகக்கூடாதா என்றாராம். உடனே அந்தக் கழுதையை இரண்டுபேரும் தூக்கிக்கொண்டு போக ஆரம்பித்தார்கள். கடைசியில் கழுதையின் கதி என்ன ஆயிற்று என்று நமக்குத் தெரியும்." இப்படி இந்த விஷயத்தில் ஒவ்வொருவரும் ஒரு அபிப்பிராயம் சொல்வதனால் சர்க்காருக்கு என்ன செய்வது என்றே புரியவில்லை. ஆகவே தான் டாக்டர் லோகநாதன் அவர்களுடைய அபிப்பிராயத்தை ஒத்துக்கொண்டு—அவர் இது சம்பந்தப்பட்ட வர்த்தகர்கள், பொது மக்கள் எல்லோரையும் கலந்து விசாரித்து, சிபார்சு செய்திருப்பதனால்—என்ன லாப நஷ்டம் ஏற்பட்டாலும் எதையும் மாற்றுவது இல்லையென்ற முடிவிற்கு வந்திருக்கிறோம் என்று சொல்ல நான் விரும்புகிறேன்.

**Sri S. M. ANNAMALAI** : மண் எண்ணையின் அவசியத்தைப்பற்றி நான் அதிகம் சொல்ல வேண்டியதில்லை. மண் எண்ணைக்கு வரி போடுவது வெகுவாக பாமர மக்களைத்தான் பாதிக்கும் என்று அன்றே சொன்னேன். நகரங்களில் இருக்கக்கூடியவர் விளக்கு முதலியவைகளுக்கு அதிகமாக மின்சாரத்தை உபயோகப்படுத்திக்கொள்கிறார்கள். ஆனால் மண் எண்ணை நாட்டுப்புறங்களில் உள்ளவர்களால் தான்—பாமர மக்களால் தான் உபயோகிக்கப்பட்டு வருகிறது. இதற்கு 5 பர்சண்ட் வரி

போட்டிருப்பது மிகமிக அதிகம். பிண்ணாக்குக்கே வரியைத் தள்ளாதவர்கள் மண் எண்ணெய்க்கு வரியை இல்லையென்று எங்கே தள்ளப்போகிறார்கள் என எனக்கே தோன்றினாலும் கூட நூற்றுக்கு ஐந்து ரூபாய் என்று இருப்பதை 1 ரூபாயாகவாவது குறைக்கவேண்டும் என்று நான் கேட்டுக் கொள்கிறேன்.

Sri T. S. RAMASWAMY PILLAI: As regards item 36, I have nothing more to say.

Sri K. SATTANATHA KARAYALAR: கனம் சபாநாயகர் அவர்களே, நான் கொடுத்திருக்கக்கூடிய திருத்தத்தில் மண் எண்ணெய்க்கு 5 பர்சண்ட் என்று இருப்பதை 2 பர்சண்ட் ஆகக் குறைக்கவேண்டுமென்று சொல்லியிருக்கிறேன். ஆனால் இதற்கு ஒரு கட்ட விற்பனை வரி விதிக்கும்படியாகச் செய்திருப்பது சரியான நிலை தான். ஒரு முனை வரி விதிப்பதற்குரிய பொருள் க்ரொசின். இதற்குப் பதில் சொல்லும் போது கனம் அமைச்சர் அவர்கள் இன்னொரு கதை சொல்லமாட்டார்கள் என்று நினைக்கிறேன். பெட்ரோல் போன்ற பொருளுக்கு வரி உயர்ந்த ரேட்டாக இருப்பதனால் மண் எண்ணெய்க்குக் குறைப்பதனால் அதிகக் கஷ்டம் ஏற்பட்டுவிடாது என்று நினைக்கிறேன்.

அடுத்தபடியாக 30-வது ஐடத்தைப் பொறுத்த வரையில் பிஸ்கட் அண்டு கேக்குக்கு வரி விதிக்கப்பட்டிருப்பது—சிறிய தவறினால் ஏற்பட்டிருக்குமோ என்று நினைக்கிறேன். சாதாரணமாக பெரிய கம்பெனிகளை மனதில் வைத்துக்கொண்டு இந்தமாதிரியாக முடிவு எடுத்திருக்கிறார்கள் போலிருக்கிறது. இதில் 'Biscuits and cakes (packed, tinned or otherwise excluding bread)' ப்ரெட்டுக்கு விலக்கு அளித்திருக்கிறார்கள். பிஸ்கட்டு, கேக் போன்றவைகள் பெரிய கம்பெனிகளில் மாத்திரம் உற்பத்தி செய்யப்படவில்லை. சாதாரணமாக ஆயிரம் ரூபாய், ஐநூறு ரூபாய்க்கு மேல் வியாபாரம் ஆகாத பங்குகளில் கூட பாட்டில்களில் வைத்துக்கொண்டு பிஸ்கட், கேக் எல்லாம் வியாபாரம் செய்கிறார்கள். வண்டிகளில் தள்ளிக்கொண்டு போய் வியாபாரம் செய்கிறார்கள். இதற்கு வரி சிங்கிள் பாயிண்டாக இருப்பதனால் 500 ரூபாய்க்கு வியாபாரம் ஆகிறது என்றாலும் கூட இதற்குத் தீர்வை வரும் என்று நினைக்கிறேன். இதை மல்டி பாயிண்டாக போட்டுவிட்டால் கூட அவ்வளவு பாதகம் ஏற்படாது. கண்டிப்பாக சில்லரை வியாபாரிகளுக்கு விலக்குக் கொடுப்பது அவசியம். பிஸ்கட், கேக் சில்லரையில் தயாரித்து விற்கக்கூடிய சிறிய வியாபாரிகளுக்குப் பாதகம் ஏற்படாத வகையில் இதைத் திருத்தவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

* Sri V. K. RAMASWAMY MUDALIYAR: சோஷலிஸ சமுதாயத்தின் கீழ் ஏழை மக்களுக்குப் பாடுபடுகிறோம், ஏழை மக்களுக்கு உதவி செய்கிறோம் என்று கூச்சல் போட்டுப் பிரயோசனமில்லை. மண் எண்ணெய்க்கு வரி போடுவதனால் ஏழை மக்கள் தான் பாதிக்கப்படப்போகிறார்கள். இதற்கு வரி போடக்கூடாது என்று எதிர்க்கட்சி சொல்கிறார்கள் என்பதற்காக ஒத்துக்கொள்ளவேண்டாம். ஏழை மக்களுக்கு உதவி செய்கிறோம் என்பதற்காகவாவது இந்தச் சலுகையை ஒத்துக்கொள்ளவேண்டுமென்று அமைச்சர் அவர்களைக் கேட்டுக்கொள்கிறேன்.

Sri T. T. DANIEL: Sir, regarding item 36, I wish to state that kerosene oil is an article which is more or less exclusively used by the most downtrodden people in the State. I think the rate of tax is also very high. It would be better if the Hon. Minister gives us an idea of the estimated approximate income that he

expects to get by imposing this tax. We would very much appreciate it if it is possible to completely exempt kerosene oil from the operation of this Act.

SRI S. LAZAR: 30-வது ஐடத்தைப்பற்றி ஸ்ரீ சட்டநாத கரையாளர் பேசியதை நான் ஆதரிக்கிறேன். இந்த வியாபாரம் ஒவ்வொரு சிறிய நகரம் முதற்கொண்டு பெரிய நகரம் வரைக்கும் குடிசைத் தொழில் மாதிரியாக நடக்கிறது. அதுவும் குறிப்பாக டாக்டர்கள் எண்ணெய்ப் பொருளை அதிகமாக உபயோகிக்கக்கூடாது என்று யோசனை சொல்கிற சமயத்தில் மக்கள் பிஸ்கட், கேக் சாப்பிட ஆரம்பிப்பதால் ஏராளமாக குடிசைத் தொழில் முறையில் பிஸ்கட், கேக் எல்லாம் உற்பத்தி செய்யப்பட்டு தெருவில் விற்கப்படுகின்றன. வின்செண்ட் போன்ற பெரிய கம்பெனிகளை மனதில் வைத்துக்கொண்டு இந்த வரியைப் போட்டுவிட்டதாக நினைக்கிறேன். சாதாரணமாக 400, 300 ரூபாய் முதல் போட்டு இன்றையதினம் பலர் இதில் ஈடுபட்டிருக்கிறார்கள். இவர்களுக்கு எல்லாம் பாதகம் ஏற்படாது இருக்க வேண்டுமென்றால் அவசியம் விலக்கு அளிக்கவேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன்.

ஐடம் 31-ஐ திலே "ப்ரஷஷஸ் ஸ்டோன்" முதலியவற்றுக்கு 3 பர்சண்ட் வரி விதிக்கப்படுகிறது. செயற்கை வைரக் கற்கள் திருச்சி போன்ற நகரத்திலே ஏராளமாக இன்று உற்பத்தி செய்யப்படுகின்றன. அது பெரிய குடிசைத் தொழிலாக இருந்து வருகிறது. இந்தச் செயற்கை வைரங்கள் ப்ரஷஷஸ் ஸ்டோன் என்பதோடு சேர்ந்து வரிவிதிக்கப்படுமா இல்லையா என்பது தெரியவில்லை. சேர்ந்தது என்கிற அபிப்பிராயம் இருந்தால் அந்த எண்ணத்தைக் கைவிடவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். காரணம் திருச்சி நகரத்தில் மட்டும் 10 ஆயிரம் தொழிலாளர்கள் அதில் ஈடுபட்டிருக்கிறார்கள். இன்னும் இரண்டு மூன்று நகரங்களில் அநேகம் தொழிலாளர்கள் ஈடுபடுகிறார்கள். சிங்கில் பாயிண்ட் டாக்ஸ்
10-50 a.m. என்று வரும்போது அவர்கள் பாதிக்கப்படாத நிலையில் at the point of first sale என்றாவது செய்வதற்கு அவசியம் அரசாங்கம் யோசிக்க வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

SRI M. R. KANDASWAMI MUDALIYAR: 36-வது பிரிவிலே 5 சத விகிதம் என்று குறிப்பிட்டுச் சொன்னார்கள். இதைக் குறைப்பது நல்லது என்று நினைக்கிறேன். காரணம் பொதுவாக கிராம மக்கள் எல்லாம் இந்த மண்ணெண்ணெயைத்தான் உபயோகப்படுத்துகிறார்கள். மேலும் கிராமங்களுக்கு ஓடும் பஸ்களிலும்கூட பெட்ரோலில் மண்ணெண்ணெயைக் கலந்து உபயோகப்படுத்துகிறார்கள் என்று கேள்விப்படுகிறேன். பெரும்பாலான கிராமங்களில் மின்சாரம் இல்லாத காரணத்தால், முக்கியமாக கிராமங்களில் தான் அதிகமாக உபயோகப்படுத்தப்படுகின்றன. எதிர்கட்சிக்காரர்களும் இதைப்பற்றி விண்ணப்பித்துக்கொண்டிருப்பதால் ஏழைமக்களை முன்னிட்டு ஒரு சதம் அல்லது இரண்டு சதம் ஆகிலும் குறைத்துக்கொண்டு அவசியம் இதற்கு அரசாங்கம் விதிவிலக்கு அளிப்பதற்கு கனம் அமைச்சர் அவர்கள் சிந்தித்துப்பார்க்கவேண்டுமென்று கேட்டுக்கொள்ளுகிறேன்.

* SRI A. GOVINDASAMY: கனம் சட்டமன்றத் தலைவர்அவர்களே, இந்த மண்ணெண்ணெய்க்கு 5 சத விகிதம் இந்தச் சட்டத்தில் வரி போட்டிருக்கிறார்கள். அதில் ஒன்றாகிலும் இரண்டு சத விகிதமாகிலும் குறைக்கவேண்டுமென்று பலர் பேசியுள்ளார்கள். ஆனால் இதை அறவே நீக்கவேண்டும் என்பது என்னுடைய அபிப்பிராயம். இந்த மண்ணெண்ணெயின் விலையுயர்வுபற்றியும் அதை வாங்கும் கஷ்டங்கள் பற்றியும் எல்லோருக்கும் நன்றாகத்தெரியும். ஆனால் நமது மின்சார அமைச்சர் நேரடியான தொடர்பு இல்லாமல் இருக்கலாம் என்று நினைக்கிறேன். கனம் அமைச்சர் அவர்கள் இப்பொழுது நாட்டில் நிலவும் நிலைமையை அறிந்து இந்த மண்ணெண்ணெய்க்கு போடப்பட்டிருக்கும் வரியை அறவே நீக்கவேண்டுமென்று கேட்டுக் கொள்ளுகிறேன். இரண்டு நாட்களுக்கு முன் சென்னையிலே மின்சாரம் தடைபட்டது எல்லோருக்கும் தெரிந்த விஷயம். அந்த சமயத்தில்

14th February 1959] [Sri A. Govindaswamy]

எவ்வளவு மண்ணெண்ணெய் விளக்குகள் தேவைப்பட்டன என்பதை எல்லோரும் அறிவார்கள். பல கிராமங்களில் மின்சார வசதி இல்லாத காரணத்தால் உணவுப்பொருளைப்போல் இதையும் நம்பி வாழ்கிறார்கள். அங்கே ஒரு புட்டி எண்ணெய்கூட சரியாக கிடைப்பதில்லை. ஆகவே இதற்கு வரியை அறவே நீக்கவேண்டுமென்று கேட்டுக்கொள்ளுகிறேன். நண்பர் கந்தசாமி முதலியார் அவர்களும்கூட இதற்கு விதிவிலக்கு அளிக்கவேண்டும் என்று பேசியிருக்கிறார்கள். அதற்கு வோட்டு எடுத்தால் அவர்களும் ஆதரிப்பார்கள் என்று நினைக்கிறேன்.

* THE HON. SRI R. VENKATARAMAN : கனம் சபாநாயகர் அவர்களே, 1956-ம் வருஷத்தில் சட்டசபையில் பேசும்போது அங்கத்தினர்கள் பல கட்ட விற்பனை வரி நல்லதல்ல, எல்லோரையும் பாதிக்கும் என்று சொன்னார்கள். நமது நாட்டிலுள்ள வியாபாரிகள் எல்லோரும் சேர்ந்து மாநாடு ஒன்று நடத்தி ஒரு கட்ட வரியை சர்க்கார் விதிக்கவேண்டுமென்று கேட்டுக்கொண்டார்கள். அதன் காரணமாக டாக்டர் லோகநாதன் கமிட்டியைப் போட்டு அதை பரிசீலனை செய்தார்கள். அந்த நிபுணரின் யோசனையின் பேரில் பல முனை வரியை மாற்றியமைத்தார்கள். இப்பொழுது பிஸ்கட்டுக்குப் போட்டிருக்கும் வரி 3 சதம் தான், ஒன்றும் அதிகம் இல்லை. இதை அங்கத்தினர்கள் நன்றாக யோசித்துப் பார்ப்பார்களேயானால் எவ்வளவு தூரம் இதற்கு குறைவாக வரி போடப்பட்டிருக்கிறது என்பது புலனாகும்.

* SRI K. SATTANATHA KARAYALAR : கனம் சபாநாயகர் அவர்களே, நம் நாட்டிலே எல்லோரும் உபயோகப்படுத்தக்கூடிய ஒரு அத்தியாவசிய பொருள் சோப்புதான். இதற்கு சர்க்கார் 5 சத வரி போடுகிறார்கள். இதற்கு வரி போடுவது என்பது மனிதனின் நாகரீக வளர்ச்சியைத் தடைப்படுத்துவதாகும். இப்பொழுது சோப் செய்வது என்பது சாதாரணமாக கிராமங்களில் குடிசைத் தொழிலாக நடத்தப்பட்டு வருகிறது. பெரும்பாலான மக்கள் இந்தத் தொழிலில் ஈடுபட்டிருக்கின்றனர். சிறு சிறு தொழிலாக நடத்துபவர்களுக்கு இந்த வரி இல்லாமல் இருந்தால் நலமாக இருக்கும். ஆனால் வசதியோடுகூடிய தொழில் அடிப்படையில் உள்ள பெரிய கம்பனியை நடத்துபவர்களுக்கு மாத்திரம் வரி போடலாம். முக்கியமாக வாஷிங் சோப் மிகவும் அத்தியாவசிய பொருளாக இருக்கிறது. ஆகவே இந்த வரி விதிப்பு அந்தத் தொழிலைப் பாதிக்காமல் இருக்கவேண்டும். ஆகவே non-edible oil soap-க்கு விதிவிலக்கு கொடுக்கவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

* SRI N. K. PALANISAMI : கனம் சபாநாயகர் அவர்களே, நான் கொடுத்திருக்கும் திருத்தம் இந்த சோப்பின் மீது விதிக்கப்பட்டிருக்கும் வரி விதிப்பினால் எவ்வளவு ஏழை எளியவர்கள் பாதிக்கிறார்கள் என்பதைப் பார்த்து non-edible substances மீது விதிக்கும் வரிக்கு விதிவிலக்கு அளிக்கவேண்டும் அல்லது 1 சத வீதம் வரி போடவேண்டுமென்று கேட்டுக்கொள்ளுகிறேன்.

* THE HON. SRI R. VENKATARAMAN : இப்போது இதற்கு பல முனை 11 a.m.
ரீதியில் 2 சதவிகிதமாக இருக்கிறது. டாக்டர் லோகநாதன் அவர்கள் இது சம்பந்தமாகக் கணக்குப் போட்டு, ஜனங்கள் இப்போது இதற்கு இந்த விகிதத்தில் மொத்தம் 6 சதவிகிதம் வரி கொடுக்கிறார்கள் என்றும் இதற்கு இனிமேல் ஒருமுனையில் 5 சதவிகிதம் போடலாம் என்றும் சொல்லியிருக்கிறார்கள். இதற்கு ஒருமுனையில் 5 சதவிகிதம் போடுவது நல்லது என்று அவர் சிபாரிசு செய்திருப்பதால் இதை மாற்ற முடியாது என்று சொல்லிக் கொள்கிறேன்.

SRI S. M. ANNAMALAI : கனம் சபாநாயகர் அவர்களே, நான் கொடுத்திருக்கும் திருத்தங்கள் அனைத்தும் விவசாயிகளின் நலனுக்காக கொடுக்கப்பட்டவை, விற்பனை வரியினால் விவசாயிகள் அதிகமாகப் பாதிக்கப்படக்கூடாது என்ற அடிப்படைத் தத்துவத்தில் இவைகளைக் கொடுத்திருக்கிறேன். விவசாயிகள் உபயோகிக்கும் 3—ஹார்ஸ் பவர் மோட்டார்கள்,

5-ஹார்ஸ் பவர் மோட்டார்கள், 5-ஆம்பியர் ஸ்விச்சுகள், 10-ஆம்பியர் ஸ்விச்சுகள் முதலியவைகளுக்கு, மசோதாவில் நிர்ணயிக்கப்பட்டுள்ள வரி விகிதத்தின்படி நிறைய வரி கொடுக்க வேண்டும். (Sri R. Subramaniam in the chair) ஒரு விவசாயி 5-ஹார்ஸ் பவர் மோட்டார் ஒன்றை நிறுவ வேண்டுமானால், அவன் 2,000 ரூபாய் செலவழித்தாக வேண்டும். அவன் இந்த 2,000 ரூபாய் செலவு செய்யும்போது, மசோதாவில் நிர்ணயிக்கப்பட்டுள்ள வரி விகிதத்தின்படி பார்த்தால், ரூ. 120 விற்பனை வரி கொடுக்க வேண்டியிருக்கும். விவசாயியிடமிருந்து இவ்வளவு விற்பனை வரிவசூலிப்பது சரியா? அரசாங்கம் விவசாயம் பெருக வேண்டும், விவசாயம் பெருக வேண்டும் என்று சொல்லிக்கொண்டு விவசாயிக்கு இவ்வளவு விற்பனை வரி போடலாமா? விற்பனை வரி மட்டுமன்றி, விவசாயிகளுக்கு என்ன வரியெல்லாம் போடலாமோ அவைகளையெல்லாம் அரசாங்கம் போட்டுவருகிறது. இவ்வாறு விவசாயிகள் மீது அரசாங்கம் வரிகளைப் போட்டுக்கொண்டே போனால் அவர்கள் நாளடைவில் சீரழிந்துபோவார்கள். ஆகவே இந்தப் பொருள்களுக்கெல்லாம் சலுகை தரவேண்டும் என்று அரசாங்கத்தைக் கேட்டுக் கொள்கிறேன்.

**Sri S. LAZAR** : கனம் தலைவர் அவர்களே, 40-வது ஐடெத்தில் "லெதர் குட்ஸ் ஆப் ஆல் கைண்ட்ஸ் எக்ஸ்க்லூடிங் புட்வேர்" என்று சொல்லப்பட்டிருக்கிறது. கிராமங்களில் உபயோகிக்கப்படும் பேலிங் (baling material) என்ன சொல்லுவார்களோ? அவைகளுக்கு வரி போட்டால் அதை வசூலிக்க முடியாது என்று நினைக்கிறேன். இப்போது கிராமங்களில் தோல் தொழிலாளர்கள் பெல்ட்டுகளும், மணிபர்சுகளும் தோலினால் செய்கிறார்கள். இவைகளுக்கு என்ன செய்வது என்று தெரியவில்லை. இவைகளைப் பொறுத்த வரையில், ஒரு முனை விற்பனை வரி நடைமுறையில் சாத்தியப்படாது, கஷ்டங்களைத்தான் உண்டுபண்ணும். ஒரு வேளை, ப்ளெக்ஸ், ரெக்ஸ், பாடா முதலிய கம்பெனிகளை மனதில் வைத்துக்கொண்டு இந்தப் பொருள்களுக்கு வரி போடப்பட்டிருக்குமோ என்று நினைக்கிறேன். "எக்ஸ்க்லூடிங் புட்வேர் அண்ட் அதர் மெடீரியல்ஸ் யூஸ்ட் பை அக்ரிகல்சரிஸ்ட்ஸ்" என்று இதை மாற்றிவிட்டால் தொந்தரவு இருக்காது என்று நினைக்கிறேன்.

**Sri A. V. P. ASAITHAMBI** : மதிப்பிற்குரிய சேர்மன் அவர்களே, கனம் அங்கத்தினர் ஸ்ரீ. எஸ். எம். அண்ணாமலை விவசாயத்திற்குப் பயன்படக்கூடிய "மோடார் பார்ட்ஸ்" போன்றவைகளுக்கு 6 சதவிகிதம் நிர்ணயிக்கப்பட்டிருக்கும் வரி விகிதத்தைக் குறைக்க வேண்டுமென்ற கருத்தைத் தெரிவித்தார். அதை நான் ஆதரிக்கிறேன். இந்த மோட்டார்கள் முன்பெல்லாம் வெளிநாடுகளிலிருந்து இறக்குமதியாகிக் கொண்டிருந்தன. இப்போது கோயம்புத்தூர், சென்னை, முதலிய இடங்களிலேயே இவைகள் செய்யப்பட்டு வருகின்றன. அவைகள் வெளிநாட்டிலிருந்து இறக்குமதி செய்யப்பட்டு வந்தபோது அவைகளுடைய விலை 200 ரூபாய் அல்லது 300 ரூபாய் அல்லது 350 ரூபாயாகத்தான் இருந்தது. இப்போது அது நான்கு மடங்கு அதிகமாகியிருக்கிறது. இந்த நிலையில் இவைகள்மீது போடப்படும் வரியும் அதிகமாக இருந்தால் இந்தத் தொழில் பாதிக்கப்படுவதுமட்டுமன்றி இவைகளை உபயோகிப்பவர்களும் மிகவும் பாதிக்கப்படுவார்கள். ஆகையால் இவைகள் மீதுள்ள வரி விகிதத்தைக் குறைக்க வழி இருக்கிறதா என்று கனம் அமைச்சரைக் கேட்கிறேன்.

* **Sri A. GOVINDASAMY** : மதிப்பிற்குரிய சேர்மன் அவர்களே, விவசாயிகள் மலையேற்றத்தில் தோலை உபயோகித்து வருகிறார்கள். இதன் மீது போடப்பட்டுள்ள வரியை நீக்காவிட்டால் விவசாயிகளுக்கு மிகவும் கவலை ஏற்படும். ஆளும் கட்சியைச் சேர்ந்த ஸ்ரீ லாஸர் போன்றவர்கள்கூட இந்த ஐடெத்தை ஏற்றுக்கொள்ளவில்லை. அவர்கள் எவ்வளவோ வற்புறுத்திச் சொல்லியும் கனம் அமைச்சர் பிடிவாதமாக இருக்கிறார். கனம் அமைச்சர், எப்படியாவது பணம் சம்பாதிக்க வேண்டும் என்ற நோக்கத்துடன் இருக்கிறார் என்று சொல்லலாம். ஸ்ரீ லாஸர் அவர்களுடைய வற்புறுத்தலுக்காகவாவது இந்தத் திருத்தத்தை ஏற்றுக் கொள்ளவேண்டும் என்று கனம் அமைச்சரைக் கேட்டுக்கொள்கிறேன்.

14th February 1959]

(Mr. Speaker in the Chair.)

THE HON. SRI R. VENKATARAMAN : யளம் சபைத் தலைவர் அவர்களே, பிடிவாதமாக இருந்து பணம் சேர்த்து அந்தப் பணத்தை மீண்டும் இந்த ராஜ்யத்திற்கான நிர்வாகத் திட்டங்களுக்கே செலவழிக்கவேண்டுமென்ற கருத்தோடு நான் இருப்பதால், கனம் அங்கத்தினர் ஸ்ரீ கோவிந்தசாமி அவர்கள் என்னைப் பற்றித் தெரிவித்த அபிப்பிராயத்தை நான் பெருமையாகக் கொள்கிறேனே தவிர குற்றமாகக் கொள்ளவில்லை.

இந்தப் பொருள்களுக்கு வரி விதிப்பது சம்பந்தமாக அந்த அந்தத் துறையில் இருப்பவர்களுடன் கலந்தாலோசித்துவிட்டுத்தான் டாக்டர் லோகநாதன் அவர்கள் தமது சிபாரிசுகளைக் கொடுத்திருக்கிறார். எனவே விஷயம் தெரியாமல், இந்தப் பொருள்களுக்கு நிர்ணயிக்கப்பட்டிருக்கும் வரி விகிதத்தில் மாறுதல் செய்தால் கஷ்டம் ஏற்படும். ஒவ்வொரு பொருளையும் விற்பனை வரிக்கு உட்படுத்தும்போது, அந்த அந்தத் துறையிலுள்ள வர்த்தகர் சங்கங்களுடனும் இதர ஸ்தாபனங்களுடனும் மற்றவர்களுடனும் கலந்தாலோசித்த பிறகுதான் விற்பனை வரி விகிதம் அந்த அந்தப் பொருளுக்கு நிர்ணயிக்கப்பட்டிருக்கிறது. ஆகவே இதில் மாறுதல் செய்ய வேண்டாம் என்று நினைக்கிறேன். இந்தப் பொருளுக்கு வரி விதிக்கப்பட்டிருப்பதால் விவசாயிகளுக்குக் கவலை வந்துவிட்டது என்று ஸ்ரீ கோவிந்தசாமி சொன்னார். விவசாயிகளின் கவலையை நீக்கவேண்டுமானால், அதற்குத் தான் 17-வது பிரிவு போடப்பட்டிருக்கிறது. அதன்படி, எக்ஸெம்ஷன் தேவைப்பட்டால், சர்க்கார் பார்த்துப் பரிசீலித்து எக்ஸெம்ஷன் கொடுக்கும். அப்படி இல்லாமல், இதற்குள் வரியை நீக்கினால், அதனால் என்ன விளைவுகள் ஏற்படுமோ சர்க்காருக்குத் தெரியாது. டாக்டர் லோகநாதன் அவர்கள் எல்லாவற்றையும் பார்த்தே தமது சிபாரிசுகளைக் கொடுத்திருப்பதால் இந்தத் திருத்தத்தை வலியுறுத்த வேண்டாம் என்று கனம் அங்கத்தினரைக் கேட்டுக்கொள்கிறேன்.

SRI S. LAZAR : On a point of clarification, Sir. டாக்டர் லோகநாதன் அவர்கள் வியாபாரிகளின் சங்கங்களைக் கூட்டி அவர்களுடைய அபிப்பிராயங்களை அறிந்த பிறகு அந்த அபிப்பிராயங்களின் பேரில் தமது முடிவுகளைச் செய்திருக்கிறார் என்றும், எனவே இந்த வரி விகிதத்தை ஒத்துக்கொள்ளவேண்டும் என்று கனம் அமைச்சர் சொன்னார். நான் முன்பு குறிப்பிட்டது போன்ற சிறு சிறு விவகாரங்கள் டாக்டர் லோகநாதன் அவர்களுடைய கவனத்திற்கு வந்திருக்க முடியாது என்று நினைக்கிறேன். இது சம்பந்தமாக கிராமக் கூட்டுறவுச் சங்கங்களாலோ, கிராமங்களில் வேலைசெய்யும் தோல் தொழிலாளர்களின் சங்கங்களாலோ, தோல் தொழிலாளர்கள் சார்பாகவோ டாக்டர் லோகநாதன் அவர்களுக்கு ஏதாவது யாதாஸ்து சமர்ப்பிக்கப்பட்டிருக்கிறதா அல்லது இந்த விஷயம் கனம் அமைச்சருடைய கவனத்திற்கு வந்திருக்கிறதா என்று தெரிவிக்க வேண்டும் என்று கனம் அமைச்சரை வேண்டுகிறேன்.

* THE HON. SRI R. VENKATARAMAN : முதலில் டாக்டர் லோகநாதன் அவர்களுடைய யாதாஸ்து பிரசுரிக்கப்பட்டது. அது பிரசுரிக்கப்பட்டவுடன் வர்த்தகர் சங்கங்கள் எல்லாம் தங்களுக்கு என்னென்ன கஷ்டங்கள் இருக்கின்றன என்பதை எடுத்தெழுதினார்கள். அதற்கு பிறகு மசோதாவைத் தயாரித்து அதை பொறுக்குக் கமிட்டிக்கு அனுப்பினோம். அங்கே யார் யார் சாட்சியம் சொல்ல விரும்பினார்களோ அவர்களுக்கு சாட்சியம் சொல்ல சந்தர்ப்பம் கொடுத்தோம். இத்தனை சந்தர்ப்பங்களிலும் ஒரு கஷ்டம் தெரிவிக்கப்படாமல் இருக்கும்போது அந்தக் கஷ்டம் ஏற்படும் என்று இங்கே யூகத்தால் கூறுவதைக் கணக்கில் எடுத்துக் கொண்டு மசோதாவில் மாறுதல் செய்வது தவறு என்று சொல்லிக் கொள்ள விரும்புகிறேன்.

SRI K. SATTANATHA KARAYALAR : கனம் சபைத் தலைவர் அவர்களே, 45-வது ஐடெத்தில் "பர்னிசர்" என்ற இனத்தில், சோபா முதலிய எல்லாவிதமான சாமான்களுக்கும் 6 பர்சண்ட் வரி நிர்ணயிக்கப்பட்டிருக்கிறது. சமீபத்தில் மாநிலத்தில் பல்வேறு இடங்களிலும்

[Sri K. Sattanatha Karayalar] [14th February 1959

கூட்டுறவு அடிப்படையில் பல " கார்ப்பென்ட்ரி யூனிட்டுகளை " அமைத்திருக்கிறோம். அப்படிப்பட்ட கூட்டுறவு ஸ்தாபனங்களும் இந்த வரிக்கு உட்படும் என்று தெரிகிறது. மேலும், தொழில் அபிவிருத்தி அடிப்படையில் சிறு தொழில்களை ஊக்குவிக்கும் முறையில், சில புதிய யூனிட்டுகள் அமைக்கப்பட்டிருக்கின்றன. இது ஒரு முனையில் விதிக்கப்பட்டிருப்பதால், இந்தத் தீர்வை அவைகளுக்கும் அமுலாகும். ஆகவே, கிராமங்களிலும் மற்ற இடங்களிலும் சிறிய அடிப்படையில் நடத்துபவர்களுக்கும் சிறிய யூனிட்டுகளுக்கும் விலக்களித்து, சென்னை, திருச்சி, மதுரை போன்ற இடங்களில் பெரிய அடிப்படையில் தொழில் நடத்தும் தொழிற்சாலைகளை மட்டுமே உட்படுத்தும் முறையில் இந்த ஐடெத்தை மாற்றியமைத்தால் நன்றாக இருக்கும் என்று கருதுகிறேன்.

* SRI A. GOVINDASAMY : மதிப்பிற்குறிய சபைத் தலைவர் அவர்களே, பனை மரத்திலிருந்து செய்யப்படும் மரச் சாமான்களுக்கு ஓரளவு விலக்கு அளிக்கும் முறையில் இந்த விகிதத்தைக் குறைக்க வேண்டும் என்பதுதான் என் திருத்தத்தின் நோக்கம். மதுவிலக்குச் சட்டம் வந்ததன் விளைவாக பனை மரம் வைத்திருப்பவர்கள் பாதிக்கப்பட்டிருக்கின்றனர் ; பனை மரத்திலிருந்து நாற்காலி, சோபா முதலியவைகள் குடிசைத் தொழில் முறையில் செய்யப்படுகின்றன. ஆகவே நாற்காலி, சோபா போன்றவைகளுக்கு இந்த விகிதத்திலிருந்து விலக்கு அளிக்க வேண்டுமென்று அரசாங்கத்தைக் கேட்டுக்கொள்கிறேன்.

THE HON. SRI R. VENKATARAMAN : " பர்னிச்சர் ", கூட்டுறவு இயக்கம் மூலம் செய்தாலும், தனியார் துறையில் செய்தாலும் வாங்குபவர்கள் விலை கொடுத்துத்தான் வாங்கவேண்டும். அதில் கூட்டுறவு சொசைட்டிகளுக்கு சலுகை என்று சொன்னால் தனியார்கள் அந்தத் துறையில் வேலை செய்யமுடியாமல் போய்விடும். வர்த்தகத்தில் பாகுபாடு செய்யக்கூடாது என்பதுதான் நோக்கம். ஆகவே கூட்டுறவு சங்கத்திற்குத் தனிச் சலுகை கொடுக்க இயலாது என்று ஆரம்பத்திலேயே சொன்னேன். அதேபோல், பனை மரத்தில் செய்தாலும் சரி அல்லது தேக்கு மரத்தில் செய்தாலும் சரி, இப்பொழுது இருக்கிற புதிதாக அமைக்கும் டாக்ஸ் இருக்கப் போகிறது. அதை கூட்டிவிடவில்லை. மைசூரில் 7 சத விகிதம், ஆந்திராவில் 7 சத விகிதம் " அப்ஹோல்ஸ்டேர்ட் பர்னிச்சருக்கு " இருக்கிறது. ஆகவே 6 சத விகிதம் என்று இருப்பது அதிகமில்லை.

11-10 a.m. SRIMATHI KAMALAMBUJA AMMAL : ஸ்ரீனிவாஸ ஐயர் அவர்கள் கொடுத்திருக்கும் . . . .

MR. SPEAKER : அந்த திருத்தம் இல்லை. தனியாகப் பேசலாம்.

SRIMATHI KAMALAMBUJA AMMAL : ஐட்டம் 46-ல் " வெஜிட்டபிள் ப்ராடக்ட்ஸ் " என்று இருக்கிறது. " வெஜிட்டபிள் ப்ராடக்ட்ஸ் " என்று சொன்னால் மஞ்சள் முள்ளங்கி, பீட் ரூட் போன்றவைகள் கூட சர்க்கரை சேர்க்கப்பட்டு " டாபிகளாக " விற்பனை செய்யப்பட்டு, வருகிறது. " Vegetable products, that is to say, any vegetable oil or fat, which whether by itself or in admixture with any other substance, has by hydrogenation or by any other process been hardened for human consumption " என்று கொடுக்கும்போது, காரட் போன்றவைகளை டாபிகளாக விற்கும்போது " human consumptions " மாதிரி வருகிறது. மிட்டாய் வகையோடு அது சேர்க்கப்படுகிறது. ஐட்டம் 29-ல் confectionery-க்கு 3 சதம் விதித்திருக்கிறார்கள். வெஜிட்டபிள் ப்ராடக்ட்ஸ்ஐ தித்திப்புப் பண்டங்களாகச் செய்தால் 6 சதவிகிதம் என்றிருக்கிறது. ஆகவே " வெஜிட்டபிள் ப்ராடக்ட்ஸ் " என்பதை மாற்றி " வெஜிட்டபிள் ஆயில் ப்ராடக்ட்ஸ் " என்று சேர்ப்பதுதான் சரியாகயிருக்கும்.

14th February 1959]

SRI A. V. P. ASAITHAMBI : ஐட்டம் 50-ல் சூடத்திற்கு 6 சத விகிதம்.

MR. SPEAKER : அதற்கு நாம் வரவில்லை, 46-ல் இருக்கிறோம்.

*THE HON. SRI R. VENKATARAMAN : இப்பொழுது "வெஜிட்டபிள் ப்ராடக்ட்ஸ்" க்கு 2 சத விகிதம் பாயின்ட்டாயிருக்கிறது. இப்பொழுது போடப்பட்டிருக்கிறது 6 சத விகிதம் பாயின்ட் ஆகும். வசூல் செய்கிற இடத்தைத்தான் மாற்றியமைக்கப்பட்டிருக்கிறது. கனம் அங்கத்தினர் இதற்கு இதுவரை வரி இல்லாமல் இப்பொழுது திடீரென்று 6 சத விகிதம் போட்டதாக நினைக்கிறார்கள். அது சரியல்ல. இப்பொழுதுள்ளதைத்தான், மல்டி பாயின்ட்லிருந்து, ஸிங்கள் பாயின்ட்டாக மாற்றியமைக்கிறோம். ஆகவே இந்தத் திருத்தத்தை எற்றுக்கொள்வதற்கில்லை.

SRI K. SATTANATHA KARAYALAR : நான் கொடுத்திருக்கும் திருத்தம் ஒரு விளக்கம் தெரிவதற்காகத்தான். Furs and skins என்று கொடுக்கப்பட்டிருக்கிறது. கிராமாந்திரங்களில் தோலை உபயோகப்படுத்தி, கமலையில் தண்ணீர் இறைக்க உபயோகப்படுத்துகிறார்கள். அப்படி வரக்கூடிய தோலுக்கு இதன் அடிப்படையில் தீர்வை வரும் என்று தோன்றுகிறது. சில இடங்களில் மாட்டுத்தோலை தண்ணீர் இறைப்பதற்கு, பக்கட் செய்ய உபயோகிக்கிறார்கள், சாதாரணமாக சக்கிலியர்கள் போன்றவர்கள். பெரிய வியாபாரத் தொழிலாக அல்ல—சிறு குடிசைத் தொழிலாக அதைச் செய்கிறார்கள். இறந்துபோன மாட்டின் தோலை எடுத்து அதை எப்படி உபயோகிக்கலாம் என்று பார்த்துத் தண்ணீர் இறைக்கும் கமலைக்கு பக்கட் செய்வதற்குள்ள ஒரு இணைப்பொருளாக உபயோகிக்கிறார்கள். அந்தத் தோலுக்கு இத தீர்வை வருமா ? அதுவும் ஸிங்கிள் பாயின்ட்டாக இருப்பதினால் இதை வலியுறுத்திக் கூறுகிறேன். நடைமுறையிலாவது அதற்கு விதிவிலக்கு இருக்குமென்று அமைச்சர் அவர்கள் சொன்னால் அது அந்த ஏழை மக்களுக்கு நன்மை பயப்பதாக இருக்கும்.

SRI A. V. P. ASAITHAMBI : இந்த சூடமானது பகவனுக்காக வேண்டி பக்தர்களால் கொளுத்தப்படுகிற ஒரு பொருளாகும். இதற்கு 6 சத விகிதம் வரி விதிக்கப்பட்டிருக்கிறது. பகவனுக்காகவும், பக்தர்களுக்காகவும் பரிந்து பேசக்கூடிய அளவிற்கு எனக்கு ஒரு சந்தர்ப்பம் கிடைத்ததற்கு மகிழ்ச்சியடைகிறேன். இந்த 6 சத விகிதம் என்பது ஆண்டவனுக்கே அடுக்காத செயலாக இருப்பதால் இதை அடியோடு ரத்து செய்துவிட வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

SRI M. R. KANDASWAMI MUDALIYAR : சூடத்திற்கு விதிக்கப்பட்டிருக்கிற 6 சத விகிதம் வரி கூடுதல் என்று சொல்வதற்கில்லை. அது, ஆண்டவனுக்கு அடுக்கக் கூடியதுதான். ஏனெனில், ஆண்டவனை தரிசிக்கக்கூடியவர்கள் அதிகம் பணம் கொடுத்து சூடம் வாங்கிக்கொளுத்தி, ஜோதியின் வடிவமாக ஆண்டவன் இருக்கிறான் என்பதைக் கண்டு கொண்டு மன நிம்மதி பெற்று ஆண்டவன் அருளைப் பெற அதி வாய்ப்பளிப்பதாகும் என்று கூறிக்கொண்டு சூடத்திற்கு அதிக வரி போடுவதில் எங்களுக்கு கவலையில்லை என்று தெரிவித்துக் கொள்கிறேன். ஆண்டவனுக்கு சூடம் கொளுத்த, அது பலம் 4 அணாவிற்குப் பதில் 10 அணாவாக இருந்தாலும் மக்கள் வாங்கி கொளுத்த சித்தமாக இருக்கிறார்கள். ஆகவே இந்த வரி இப்படியே இருக்கலாம், எனக் கூறுகிறேன்.

SRI A. GOVINDASAMY : ஆண்டவனைப்பற்றி நான் பேச வரவில்லை. கர்ப்பூரத்தைப்பற்றித்தான் பேச வந்திருக்கிறேன். கர்ப்பூரம் மருந்திற்கு உபயோகிக்கப்படும் பொருளாகும். ஆகவே அதன் மீதுள்ள வரியைக் குறைக்க வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். பக்தர்களுக்கு பரிந்து

பேசினுலும்கூட அதை எற்றுக்கொள்ள மாட்டேன் என்கிருர்கள். ஆகவே, ஆண்டவன் விஷயத்தில் நான் தலையிடவில்லை. மருந்திற்கு சூடம் உபயோகமாக இருப்பதால் அதற்கு வரி விலக்கு கொடுக்கவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

THE HON. SRI R. VENKATARAMAN : Furs and skins "(other than those of cattle, sheep and goat.)" என்றிருக்கிறது. நடைமுறையில் எதாவது கஷ்டம் ஏற்பட்டால் அதைப்பற்றிக் கட்டாயம் கவனிக்கலாம். அதைச் சேர்க்கவேண்டுமென்ற உத்தேசம் இல்லை. கர்ப்பூரத்தைபற்றி நான் அதிகமாக ஒன்றும் சொல்லப் போவதில்லை. இப்பொழுது இருக்கிற வரியைத்தான் பாயின்ட்டாகயிருப்பது ஸிங்கள் பாயின்ட்டாக மாற்றியமைக்கபட்டிருக்கிறது.

SRI K. SATTANATHA KARAYALAR : Wattle bark including dyeing and tanning materials" என்றிருக்கிறது. நம் நாட்டில் "டானிங்" பொருள்கள் அதிகமாக் கிடைக்கவில்லை. அதை அதிக விலை கொடுத்து வெளி நாடுகளில் இருந்து இறக்குமதி செய்ய வேண்டியிருப்பதால் உள்நாட்டிலேயே வாட்டில் மரங்கள் இப்பொழுது வெகுவாக பயிரிட்டு வருகிருேம். இதில் பாரஸ்ட் இலாகாவும் அதிக ஊக்கம் கொடுத்து வருகிறது. தனிப்பட்ட நபர்களும் சில இடங்களில் வாட்டில் மரங்கள் வளர்க்க முன் வந்துள்ளார்கள். ஆகவே, வெளிநாட்டிலிருந்து வருகின்றவைகளுக்குத்தான் வரி உண்டா, அல்லது நம் நாட்டிலேயே உற்பத்தி செய்யப்படுகிற, வாட்டில் பார்க்குக்கும் உண்டா என்று தெரியவில்லை. நம் நாட்டில் உற்பத்தி செய்யப்படும் வாட்டில் பார்க்குக்கும் வரி உண்டு என்று தெரிகிறது. இது, டானிங் பொருளாக இருப்பதாலும், கிடைக்கக் கூடாத அபூர்வ பொருளாகவும் இருப்பதால இதற்கு விதிவிலக்கு கொடுக்க வேண்டுமென்று கோாயுள்ளேன்.

11-20 a.m. * SRI M. J. JAMAL MOIDEEN : Mr. Speaker, Sir, before moving my amendment I just want to point out a type mistake that has crept into the amendment. I wanted the substitution of figure '2' for '3'.

MR. SPEAKER : May I just point out to the hon. Member that he cannot move his amendment now? When the amendments were taken up the hon. Member was not in his seat and therefore it was treated as withdrawn. If, however, the hon. Member wants to move it now, it can be done only with the special permission of the Speaker.

However there is an identical amendment moved by the hon. Member Sri Karayalar. The hon. Member may speak on that amendment. But if he wants to move his amendment he must obtain the permission of the Speaker. If the hon. Member makes a request, I shall consider his request.

* SRI M. J. JAMAL MOIDEEN : His amendment is slightly different from mine. I would like to move my amendment. Therefore I request the Hon. Speaker to permit me as a special case to move my amendment.

MR. SPEAKER : I allow the hon. Member to move the amendment as a special case.

14th February 1959]

* SRI M. J. JAMAL MOIDEEN: Mr. Speaker, Sir, I move—

" *Omit* item 60;

or

" In item 60 (i) in column (3) *for* the words ' at the point of last purchase in the State ' *substitute* the words ' at the point of first sale in the State ' and

(ii) in column (4), *for* the figure ' 3 ' *substitute* the figure ' 2 '."

SRI K. SATTANATHA KARAYALAR: Mr. Speaker, Sir, I second the amendment.

* SRI M. J. JAMAL MOIDEEN: I want to make another request to the Hon. Speaker. There is another amendment in my name, amendment No. 189. I want to leave the House a little earlier and therefore I would request the Hon. Speaker to permit me to move that also.

MR. SPEAKER: The hon. Member cannot do that.

* SRI M. J. JAMAL MOIDEEN: In the list of amendments circulated in the last line of my amendment there is a typographical error. The figure occurring in the line should be ' 2 ' and not ' 1 '. I had intended that ' 3 ' should be substituted by the figure ' 2 '. I had made this correction while moving the amendment. Sir, my intention in asking this item to be omitted is this. Hitherto, it was subjected to multipoint tax. Now they have made it a singleput point tax at three per cent. The other day the Hon. Minister while replying to the general debate on the Bill said that all the recommendations made by Dr. Loganathan had been adhered to and in the case of hides and skins and also the wattle-bark the same thing had been followed. We were all glad when Dr. Loganathan was appointed to go into the question of sales tax. But when we met him we found he did not have a free mind.

MR. SPEAKER: How can the hon. Member say that? It won't be correct for the hon. Member to make that accusation against Dr. Loganathan here.

SRI M. J. JAMAL MOIDEEN: I am not making an accusation.

MR. SPEAKER: The hon. Member said that, Dr. Loganathan did not have a free mind in the matter. That is an accusation.

* SRI M. J. JAMAL MOIDEEN: He was under the impression that he should try to eliminate difficulties and see that the revenue from any particular item was not reduced. That was the thing he was labouring under. I said all his investigations

were based on that one idea that no amount pertaining to any particular item should be reduced. That is why I said so. If I have used a wrong word or expression or language I am sorry for it. I would like to apologise for it. But the fact remains that he did not consider these things on the merits of the question. Of course we represented matters to him. He said : 'All right, if I do something, can you assure me that the same quantum of revenue could be collected from the same articles and the basis on which it could be done? '

Now, I would request the Hon. Minister to put this again under the multipoint tax instead of putting it under the singlepoint, with three per cent because there is not too many stages in the sale of these materials.

SRI S. LAZAR : ஸார், இதில் மியூஸிக்கல் இன்ஸ்ட்ருமெண்ட்ஸ் என்று சொல்லப்பட்டிருக்கிறது. சாதாரணமாக இந்த சங்கீதக் கருவிகளை ஆசாரி போன்ற தொழிலாளிகள் கிராமங்களில் செய்து நகரப் புறங்களில் கொண்டுபோய் விற்கக்கூடிய ஒரு பொருளாக இருந்து வருகிறது. பெரிய அளவில் இம்மாதிரிக் கருவிகளைத் தயாரிக்கக்கூடிய கம்பெனி ஒன்றிரண்டு இருக்கலாம். ஆகவே இதை ஸிங்கிள் பாயிண்ட் என்று போட்டிருப்பதிலிருந்து எடுத்து மல்டி பாயிண்ட்டுக்கு மாற்றிவிட்டால் இந்தத் தொழிலில் ஈடுபட்டிருக்கும் தொழிலாளர்களுக்குப் பாதுகாப்பாக இருக்கும். ஏற்கெனவே இந்த தொழில் நாளடைவில் சீர்கேடு அடைந்து வருகிறது என்று அடிக்கடி இந்தச் சபையிலேயே கனம் வேதரத்தினம் பிள்ளை அவர்கள் போன்றவர்கள் சொல்லிக்கொண்டிருக்கிறார்கள். இந்த நிலைமையில் இந்த பொருட்களுக்கு வரி போடுவது உசிதமல்ல என்பதை தெரிவித்துக் கொள்கிறேன். இதை வேண்டுமானால் பெரிய கம்பெனிகள் கொடுக்கலாம். அதற்காக இப்போது ஒருமுனையில் இருப்பதை பலமுனை என்று மாற்றி அமைத்து சிறு தொழிலாளர்களுக்கு இதிலிருந்து விலக்கு அளிக்கவேண்டும் என்று அமைச்சர் அவர்களைக் கேட்டுக்கொள்கிறேன். இது போன்ற திருத்தங்களை கொண்டு வருவதின் நோக்கம், இதைப்பற்றி பரிசீலனை செய்தவர்கள் சரியான விதத்தில் பரிசீலனை செய்யவில்லை என்று குறிப்பிடுவதற்காக அல்ல. "யானைக்கும் அடி சறுக்கும்" என்று சொல்வது மாதிரி சிலவேளை இம்மாதிரிப்பட்ட விஷயங்கள் பரிசீலனை செய்தவர்களுடைய கவனத்திற்கு வந்திருக்காது என்ற எண்ணத்துடன் இம்மாதிரிப்பட்ட திருத்தங்கள் கொடுக்கப்படுகின்றன. "நாங்கள் இதையெல்லாம் கவனத்தில் எடுத்துக்கொண்டு பரிசீலனை செய்துதான் இந்த முடிவுக்கு வந்திருக்கிறோம்," என்று சொன்னால் நாங்கள் அதை வலியுறுத்தத் தயாராக இல்லை என்பதைத் தெரிவித்துக்கொண்டு எனது பேச்சை முடித்துக்கொள்கிறேன்.

11-30 a.m. MR. SPEAKER : I want to clear the misapprehension of the hon. Member Sri Jammal Moideen. If he is making any statement of anything which is in print and which is before the House, then he is justified. Otherwise, he will not be correct in saying that Dr. Loganathan was under some embarrassment. There might have been some personal conversation between the hon. Member and Dr. Loganathan which might have led to this impression but we cannot discuss that in the House. So, I would request the hon. Member to state if there is anything in print to support the reference made by him. Then, the hon. Member is entitled to make such a reference. Otherwise such references will be embarrassing both to Dr. Loganathan and to this House.

14th February 1959] [Mr. Speaker]

Now, the Hon. Minister will reply. If necessary, I will call the hon. Member.

* THE HON. SRI R. VENKATARAMAN : The hon. Member Sri Jammal Moideen has made a categorical statement in the House with regard to the scope of the enquiry conducted by Dr. Loganathan. Therefore, I want to read a portion from the report of Dr. Loganathan.

' No detailed terms of reference was given to me. I was informed by the Minister that I was free to examine all aspects of the sales tax and make such recommendations as I deemed appropriate. However, in examining the possibilities of simplifying the Sales Tax System in Madras, I held the following general objectives in view '.

Among the objects he set to himself, one was ' It should give relief to the consumers to the extent that revenue considerations will permit '.

Therefore, there was no question of Dr. Loganathan not being a free agent. The responsibility of taking a decision with regard to the levying of a tax and the rate was that of the Government. It does not therefore mean that the Government should not be advised even against its own inclination by an expert. That is the approach that the Government took in this matter. We were prepared to entrust the enquiry to the expert and take the blame for not following one or two of his recommendations ourselves. That is what we have done. Therefore, it would not be right to question the validity of his recommendations. You may question the validity of the conclusion reached by the Government on this matter.

This question has always been a vexed one, the taxation of hides and skins and wattle-bark and other tanning ingredients and so on. Several conflicting representations were received and Government felt that the point of taxation should be the last purchase in the State. Dr. Loganathan examined all the aspects of the case. The trade made several representations to him and he came to the conclusion that the taxation of wattle-bark should be at the last purchase namely by the tanner, is the appropriate point of levy of tax. Otherwise all the objections with regard to small dealers, the objections regarding cultivation of wattle-bark raised by some hon. Members, will have some validity. Now there is no difficulty with regard to the cultivation of wattle-bark, no question of small dealers and so on. It is only at the point of purchase by the tanner who tans and exports to other countries that the levy is made. I think that is the most appropriate place and the levy is itself is not very heavy. It is appropriate and I have nothing more to add.

MR. SPEAKER : If the hon. Member wants to say anything by way of personal explanation in support of his contention I will allow. But he cannot make a second speech on the amendment.

[14th February 1959

* SRI M. J. JAMAL MOIDEEN : Mr. Speaker, Sir, I want to make a personal explanation. I have already made a long speech and I might have given a wrong impression. In his report, Dr. Loganathan has stated that whatever be the reforms suggested, they should not involve any loss in the current level of the State revenue from sales tax. This has perhaps led me to give a wrong impression. Whatever it is . . .

THE HON. SRI R. VENKATARAMAN : He could have stated . . .

MR. SPEAKER : Let the hon. Member complete his personal explanation.

SRI M. J. JAMAL MOIDEEN : As I said, I might have given a wrong impression and I am sorry about it.

As regards the reference made by the Hon. Minister regarding tanning . . .

MR. SPEAKER : The hon. Member cannot make a second speech. He must confine himself to what is stated in the Report of Dr. Loganathan.

*Item 62—Palmyra fibres and stalks*

SRI M. S. SELVARAJAN : கனம் சபாநாயகர் அவர்களே, என்னுடைய திருத்தத்தை அரசாங்கம் ஏற்றுக்கொண்டிருப்பதாகச் சந்தோஷப்படுகிறேன். இந்த இடத்தில் மற்றொன்றைக் குறிப்பிட விரும்புகிறேன். தும்பு எடுக்கும் தொழில் பெரும்பாலும் குடிசைத் தொழிலாகத்தான் இருக்கிறது. இன்றைய தினம் இருக்கிற பொருளாதார நிலையை உத்தேசித்து அரசாங்கம் இந்த அளவிற்கு ஒரு சிறு சலுகை கொடுப்பதற்கு முன் வந்திருக்கிறது. ஆனால் எதிர் காலத்தில் இந்த வர்த்தகத்தினால் வெளிநாட்டினரின் பணம் நம் கைக்கு வருவதற்கு ஏது இருக்கிறது. அது ஒரு புறம் இருக்க, இந்தத் தொழில் முற்றிலும் குடிசைத் தொழிலாக இருப்பதால் இன்னும் எந்த விதத்தில் சலுகை அளிக்கலாம் என்று அரசாங்கம் புனர் பரிசீலனை செய்யவேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன்.

SRI T. S. RAMASWAMY PILLAI : கனம் சபாநாயகர் அவர்களே, செலெக்ட் கமிட்டியிலே இந்த இடத்தைப்பற்றி நன்றாக விவாதித்தாகி விட்டது. அமைச்சர் அவர்கள் இதைப் பரிசீலனை செய்வதாகச் சொன்னார்கள். கன்னியாகுமரி, திருநெல்வேலி போன்ற மாவட்டங்களிலும், தென் ஆற்காடு மாவட்டத்திலுங்கூட ஏராளமான ஏழை மக்கள் அங்கேயெல்லாம் பனம் தும்பு என்று சொல்வோர்கள், இங்கே என்ன சொல்வார்களோ தெரியாது. பனை நார் இவைகளை எடுத்து வெளிநாடுகளுக்குப் அனுப்பி, அதிலிருந்து அவர்கள் பிழைத்துக்கொண்டிருந்தார்கள். இது ஒரு குடிசைத் தொழிலாக இருக்கிறது. இத்தகைய குடிசைத் தொழிலுக்கு ஆதரவு காட்டவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். எத்தனையோ குடிசைத் தொழில்களுக்கு விதி விலக்கு செய்திருக்கிறோம். இதற்கும்கூட விதி விலக்குச் செய்யவேண்டுமென்று இங்கு குறிப்பிடப்பட்டது. நம் அமைச்சர் அவர்கள் 3 சதமானம் இருந்ததை 2 சதமானமாக ஆக்கியதைப்பற்றி மகிழ்ச்சியடைகிறேன். என்னுடைய திருத்தம், அதை ஒரு சதமானமாகக் குறைக்க வேண்டுமென்பது. ஏனென்றால் சர்வ தேச வர்த்தகத்திலே இங்கிருந்து அனுப்பப்படும் பொருள்களுக்குப் போட்டியாக இப்போது ஸிந்தெடிக் பைபர்ஸ் வந்தாகிவிட்டது. இந்த வியாபாரம் இல்லாவிட்டால் ஆயிரக்

14th February 1959] [Sri T. S. Ramaswamy Pillai]

கணக்கான குடும்பங்கள் பிழைப்பில்லாமல் போய்விடும். இப்போதே கூட சில கம்பெனிகள் இரண்டு மூன்று கம்பெனிகள் அடைக்கப்பட்டு விட்டது கொளச்சல் போன்ற இடங்களிலே, திருநெல்வேலி ஜில்லாவிலே கூட. ஆகையால் வேறு குடிசைத் தொழில்களுக்கு விதி விலக்குக் கொடுப்பதுபோல இதற்கும் கொடுக்கவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

Sri K. SATTANATHA KARAYALAR : கனம் சபாநாயகர் அவர்களே இந்த பனை நாருக்கு விதித்திருக்கக் கூடிய வரியை மூன்று சதமானத்திலிருந்து இரண்டு சதமானமாகக் குறைத்துக் கொள்கிறோம் என்று அமைச்சர் அவர்கள் சொன்னார்கள். இது ஒரு முனை வரியில் இருப்பது, இரண்டு, மூன்று தடவைகளாக மாறும் என்ற அடிப்படையில் டாக்டர் லோகநாதன் அவர்கள் சிபாரிசு செய்துள்ளார்கள். இந்த இனத்தினாலே சர்க்காருக்குக் கிடைக்கக் கூடிய வரி 20,000 ரூபாய்தான் இருக்கும் என்று தோன்றுகிறது. இந்தத் தொழிலிலே ஈடுபட்டுள்ள மக்கள் 20,000-க்கும் அதிகமாக இருக்கிறார்கள். இவர்கள் வேலை செய்வதைப் போய்ப் பார்த்திருந்தால், இதற்கு வரி விதிக்கவேண்டும் என்ற எண்ணம் வந்திருக்காது. கத்தாழையிலே நார் எடுக்கிறார்களே அது மிகவும் கஷ்டமான வேலை. அதிலும் கஷ்டமான வேலை இது பனை மட்டை இப்போது அடுப்பு எரிக்கத்தான் உபயோகப்படும். இந்தத் தொழிலும் எல்லா வேளையிலும் நடப்பதில்லை. இதை ஒரு பஞ்சகால வேலை என்று சொல்லலாம் அல்லது பஞ்ச நிவாரண வேலை என்று கூடச் சொல்லலாம். விவசாயத்திலே வேலை இருக்கக் கூடிய நாட்களிலே இந்த வேலையை யாரும் செய்ய மாட்டார்கள். மட்டையை ஊறவைத்து, அடித்துப் பதனிட்டு பைபராக்குவதிலே ஈடுபட்டால், அதிலே சாதாரணமாக ஒரு மனிதருக்குக் கிடைக்கக் கூடியது 8 அணா கூட இருக்காது. ஆகையால் கொஞ்சம் சிந்தனை செய்து பார்க்க வேண்டும். எவ்வளவு கஷ்டப்பட்டு வேலை செய்தாலும் 8 அணாவிற்கு மேல கிடைக்காது. அதோடு இது வான வேலை இருக்கக்கூடிய காலத்தில் யாரும் இந்த வேலைக்கு வருவதில்லை. அடுப்பு எரித்து வீணாகப் போகக் கூடிய மட்டைகளை வெளிநாடுகளுக்கு ஏற்றுமதி செய்கிறார்கள். அங்கே எலெக்ட்ரிக் ஸ்வீப்பர்ஸ் என்று சொல்லக் கூடிய யந்திரத்தில் துடைப்பதில் உள்ளே இணைத்துப் பெருக்குவதற்கு உபயோகப்படுத்துகிறார்கள். இது விஞ்ஞானத் துறையிலே வளர்ந்தோங்கும் நாட்டிலே உபயோகப்படுகிறது. இதற்கும் இப்போது போட்டி வந்துள்ளது. தென் ஆப்பிரிக்காவில் இதற்கு எதிராக அதிக நீளமுள்ள பைபர் கண்டுபிடிக்கப்பட்டு போட்டியாக வந்துள்ளது. எக்ஸ்போர்ட் புள்ளி விவரங்களைப் பார்த்தாலும் கடந்த நான்கைந்து ஆண்டுகளில் ஏற்றுமதியானது குறைந்து வருகிறது. கூடிய சீக்கிரம் நின்று கூட விடலாம். இதற்குத் தீர்வை விதிப்பதானது அகில இந்திய ரீதியில் டாலர் சம்பாதிப்பதில் இடைஞ்சலாக வந்து விடும். இது இங்கு வீணாகப் போகக் கூடிய ஒரு பொருள்தான். பஞ்ச காலத்தில் பஞ்ச நிவாரணமாகப் பிழைப்பைக் கொடுக்கக் கூடிய தொழிலாகும் இது. குறிப்பிடத் தகுந்த அளவு வரிமூலம் பணம் வராத இனம். ஆகையால் இந்த இனத்திற்கு விதி விலக்குக் கொடுக்கவேண்டும் என்று பணிவோடு வேண்டிக் கொள்கிறேன். அமைச்சர் அவர்கள் இப்போது அதை 2 சதமானமாகக் குறைப்பதற்கு ஒத்துக் கொண்டிருக்கிறார். இதை முற்றிலும் நீக்கிவிட்டால் வரி இனத்தில் வருவாய்க்குக் குந்தகம் வந்து விடும் என்று சொல்வதற்கில்லை. இதில் அரசாங்கம் என்ன தொகை வரிமூலம் எதிர் பார்க்கிறார்கள் என்று தெரிவிக்க வேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன். ஆகையால் இதை முற்றிலும் நீக்கி விடுவது சாலச் சிறந்தது என்று சொல்ல விரும்புகிறேன்.

Sri T. T. DANIEL : Mr. Speaker, Sir, while appreciating the Government for having reduced the rate of tax from three per cent to two per cent, I would again appeal to the Hon. Minister to exempt this article from this tax completely. As has been correctly pointed out, this industry is carried on partly on a factory basis

and partly as a cottage industry. The conditions of the workers are really very miserable and even though they may work for eight or nine hours, they would not get even 10 or 12 annas.

I must also bring to the notice of the Government that there is really a very keen competition between our palmyra fibre and the palmyra fibre from Mexico and South Africa and also American synthetic fibre in the world market. It is seen from the balance sheets prepared by several companies that the quantity exported is being reduced during the last two or three years. I must also tell the House that some companies have already closed down and if the present state of affairs continue, perhaps they may even insist on the reduction of the workers in the factories. It is in such a condition that this industry is existing at present and I would therefore request the Hon. Minister to exempt this article from this tax completely.

*SRI A. GOVINDASAMY : *கனம் சபாநாயகர் அவர்களே, மது விலக்கு ஏற்பட்டதன் விளைவாக பாதிக்கப்பட்ட மக்கள் இந்தக் குடிசைத் தொழிலிலே பெருவாரியாக ஈடுபட்டிருக்கிறார்கள். மது விலக்குத் திட்டத்தினாலே பாதிக்கப்பட்ட மக்களுக்குப் பல விதச் சலுகைகளைத் தேடித் தருவதாகச் சொல்லிவருகிற அரசாங்கம், திட்டத்தினாலே பாதிக்கப்பட்டு பனைமரத்தை வைத்துக் கொண்டிருப்பவர்கள் பனை நாரிலிருந்தும், பனை ஈர்க்கிலிருந்தும் அன்னியச் செலாவணியைச் சம்பாதிக்கக் கூடிய நல்ல வசதி இருக்கக் கூடிய தொழிலாக உள்ள தொழிலிலே ஈடுபட்டிருப்பவர்களுக்கு வேண்டிய சலுகைகளை அளிக்க வேண்டியது அவசியமாகும். அமைச்சர் அவர்கள் இதற்கு 3 சதவீதமாக இருந்ததை 2 சதவீதமாகக் குறைத்ததை வரவேற்கிற நேரத்தில், நாங்கள் கேட்கிறதற்கு முன்பே குறைத்துக் கொள்ள முன் வந்ததற்காக அவருடைய நல்லெண்ணத்தைக் கொண்டு பாராட்டுகிறேன். அதோடு நாங்கள் கேட்டதற்காக இன்னும் ஒரு சதவீதம் குறைத்து அதாவது ஒரு சதவீதமாகக் குறைத்தால் இந்தத் தொழிலில் ஈடுபட்டுள்ள மூன்று மாவட்ட மக்கள் அமைச்சர் அவர்களைப் பெரிதும் பாராட்டுவார்கள் என்பதில் சந்தேகமில்லை. இப்போது கைத்தறிக்கு விதி விலக்கு அளித்திருக்கிறார்கள், கைத்தறி போல இதுவும் ஒரு குடிசைத் தொழில். இந்தத் தொழிலில் ஈடுபட்டுள்ளவர்கள் பனை ஈர்க்கிலிருந்து பெட்டி போன்றவைகள், மணிபர்ஸ் போன்றவைகள் எல்லாம் செய்கிறார்கள். இந்தத் தொழில் நசுங்காது இருக்கவேண்டுமானால், அமைச்சர் அவர்கள் ஏற்கெனவேயே ஒரு சதவீதம் குறைத்துக் கொண்டுவிட்டார்கள், எங்களுக்காக வேண்டி, மக்கள் நலனைக் கருதி இன்னும் ஒருசதவீதம் குறைத்தால் எல்லோரும் நன்றி செலுத்தவார்கள் என்று சொல்லிக் கொண்டு, இதை நன்றாக ஆலோசித்து சொல்லவேண்டும், வழக்கமாகச் சொல்லுகிற பதிலையே இதற்கும் சொல்லக் கூடாது என்று கேட்டுக் கொள்கிறேன்.*

SRI M. R. KANDASWAMI MUDALIYAR : *தலைவர் அவர்களே,*
11-40 a.m *இந்தத் தொழில் என்னுடைய சேலம் ஜில்லாவிலும் கூட பரவலாக இருந்துகொண்டு வருகிறது. இந்தத் தொழில் மிகவும் போற்றுதற்குரிய முறையில் ஹரிஜனங்களாலும், தாழ்ந்த வருவாய் உள்ளவர்களாலும் நடைபெறுகிறது. கத்தாழை நார் எடுப்பது, பனை மட்டையிலிருந்து நார் எடுப்பது என்றால் மிக அசுத்தமான பொருளை நீக்கி எடுக்கவேண்டிய ஒரு காரியம். அசுத்தமான தண்ணீர் நாற்றம் இவைகளைச் சகித்துக்கொள்ள வேண்டிய முறையில், மிகக் கஷ்டமான முறையில் நார் எடுத்து ஜீவனம் செய்யக்கூடிய முறையில் இதில் ஈடுபட்டிருப்பவர்கள் இருக்கிறார்கள். அதோடு கூட, இந்த நார் வெளிநாடுகளுக்கு ஏற்றுமதி செய்யப்படுவதன் மூலமாக நமக்கு டாலர் முதலான அன்னிய நாட்டுச் செலாவணியைச் சம்பாதித்துக்கொடுக்கிறது. இத்தகைய தொழில் நசித்துப் போகாமல*

14th February 1959] [Sri M. R. Kandaswami Mudaliyar]

பார்த்துக்கொள்ளக்கூடிய முறையிலும், இந்தத் தொழிலில் ஈடுபட்டு மிக எளிய நிலைமையில் கஷ்டப்பட்டுக்கொண்டிருப்பவர்களைக் காப்பாற்றும் வகையிலும், இதற்கு விதிவிலக்கு அவசியம் தேவை. இரண்டு சதவிகிதமாக குறைத்திருக்கிறார்கள். திரு. கரையாளர் அவர்கள் சொன்ன மாதிரி, இந்தத் தொழில் மிக அழிந்து போகக்கூடிய நிலைமையிலே சிறிய வர்க்கத்தினராலே இயக்கக்கூடிய தொழிலாக இருப்பதால், அதுவும் குடிசைத் தொழிலாக இருப்பதால், குடிசைத் தொழிலுக்கும் கூட்டுறவு இயக்கத்திற்கும் நம் அரசாங்கத்திலிருந்து ஒத்தாசைசெய்து, வளர்க்க ஏற்பாடு செய்துகொண்டிருப்பதால், 2 சதவிகிதம் என்பதை 1 சதவிகிதமாகக் குறைப்பது நல்லதாக இருக்கும். சேலம் ஜில்லாவில் இத்தொழில் பரவலான முறையில் நடப்பதால், அதை அமைச்சர் அவர்கள் நன்றாக யோசித்து, கூடுமானால் குறைப்பதற்கு முயற்சி செய்யவேண்டும். ஏற்கனவே பல மெம்பர்கள் சொல்லியதன் காரணமாக ஒரு சதவிகிதம் குறைந்திருக்கிறது ; மேலும் இன்னொரு சத விகிதம் குறைத்தால் வசதியாக இருக்கும். அதை முடிந்தால் செய்யுமாறு கேட்டுக் கொள்கிறேன்.

SRI N. K. PALANISAMI : கனம் சபா நாயகர் அவர்களே கனம் மந்திரி அவர்கள் முன்பு பேசியபோது, " வியாபாரம் செய்வதில் தனிப்பட்டவர்களுக்கும் கூட்டுறவு சங்கங்களுக்கும் ஒரே சலுகை தான், கூட்டுறவு சங்கங்களுக்குத் தனிச் சலுகை கிடையாது " என்று சொன்னார்கள். இம்மாதிரி ஒரு கொள்கை வைத்திருப்பதன் காரணமாகத்தான் சிறு சிறு கைத்தொழில்கள் அபிவிருத்தி அடையாமல், ஆரம்பித்த நிலையிலேயே இருந்துகொண்டிருக்கின்றன. கைத்தறி கூட்டுறவு சங்கத்தை எடுத்துக்கொண்டால், கைத்தறித் துணிக்கு ரிபேட் கொடுப்பதோடு விற்பனை வரிச் சலுகை கொடுக்கப்படுகிறது. அதேபோல், சிறு சிறு கைத்தொழில்களுக்கும் சலுகை கொடுத்தால்தான் பெரிய தொழில்களுடைய போட்டியிலிருந்து அவைகள் காப்பாற்றிக்கொள்ளக்கூடும்.

THE HON. SRI R. VENKATARAMAN : Sir, I rise on a point of order. This item 62 relates to palmyra fibres and stalks, and not to co-operative society. The hon. Member is speaking on the merits of the co-operative society. (Laughter.)

MR. SPEAKER : I was about to draw the hon. Member's attention to that fact. That is right.

SRI N. K PALANISAMI : I am coming to that Sir ஆகவே, பல இடங்களில் பல பேர்கள் இன்றையதினம் சர்க்காரைக் கூட்டுறவு ஸ்தாபனங்கள் வைத்து .

MR. SPEAKER : Let the hon. Member confine himself to palmyra.

SRI N. K. PALANISAMI : குறைந்தது கூட்டுறவு ஸ்தாபனம் மூலமாக உற்பத்தி செய்யக்கூடிய பொருள்களுக்காவது இந்த விற்பனை வரியிலிருந்து விதிவிலக்கு அளிக்கவேண்டும் என்று நான் கேட்டுக் கொள்ளுகிறேன். . . . . . . .

MR. SPEAKER : I am sorry. If the hon. Member will not listen to me, I cannot allow him to proceed. Further, a point of order has been raised and I uphold the point of order. The Hon. Minister will speak now.

* THE HON. SRI R. VENKATARAMAN : கனம் சபாநாயகர் அவர்களே, ஒரு ஊசி மேலே கோபுரம் கட்டினால் எவ்வளவு ' பௌண்டேஷனி 'லே இருக்குமோ அதுமாதிரி எல்லா ஆர்குமெண்டுகளையும் இதற்குச் சொல்லி விட்டார்கள். காரணம் என்னவென்றால், இந்த ' Palmyra fibre ' வெளி நாடுகளுக்கு ஏற்றுமதி செய்யப்பட்டு, அந்த இடங்களிலே விற்பனை செய்ய

முடியாமல் இன்று மூடும்படியான நிலைமை ஏற்பட்டு விட்டது என்று சொன்னார்கள். ஒரு பண்டத்தின் இண்டர்நாஷனல் ப்ரைஸ் ஒரு சத விகிதம், இரண்டு சத விகிதம் வரி விதிப்பதினால் கொஞ்சங்கூட பாதிக்கப்படுவதில்லை. அதற்கு வெளி நாடுகளிலே தேவையோ, வெளி நாடுகளிலே விலையோ அந்தந்தப் பண்டங்களுக்கு ஏற்பட்டிருக்கும் உலகத் தேவை-சப்ளை நிலைமை (World supply and demand position) யைப் பொருத்தது. அதற்கு உரிய மற்ற பண்டங்கள் அகப்படுவதையும் பொருத்தது. அங்கு விலை கிடைக்கவில்லை, அதனால் விற்பனை வரியைக் குறை' என்று சொல்வதற்கு ஆதாரம் இல்லை.

ஆனால், நாம் முக்கியமாகப் பார்க்க வேண்டியது என்னவென்றால், நம்முடைய ராஜ்யத்திற்குப் போட்டியாக பக்கத்து ராஜ்யத்திலே என்ன வரி விதிக்கிறார்கள், அவர்கள் போடும் வரி விகிதம் நம்முடையதைவிட குறைவாக இருக்கிறதா என்பது. அவர்களுடைய வரி விகிதம் குறைவாக இருந்தால், அவர்களுடைய ராஜ்யத்தில் வாங்கும் நிலைமை ஏற்படும் என்பதைத் தான் அவர்கள் எடுத்துப் பார்க்க வேண்டும். அவ்வாறு பார்க்கின்ற போது, இந்தப் பண்டத்திற்குப் போட்டியாக இருக்கும் ஒரு ராஜ்யம் கேரள ராஜ்யம். அங்கே தான் 'பைபர்' அதிகமாக உற்பத்தி செய்து வெளி நாடுகளுக்கு ஏற்றுமதி செய்கிறார்கள். அந்த ராஜ்யத்தில் இதற்கு இரண்டு சத விகிதம் Single பயிண்டாகப் போட்டிருக்கிறார்கள். Fbire is taxed as coir at 2 per cent single point.

ஆகவே, அந்த இடத்தில் இரண்டு சத விகிதம் சிங்கில் பாயிண்ட் விற்பனை வரி போடுகிறார்கள். நமக்கு அவ்வளவு வளர்ச்சியடைந்த தொழில் அல்லது இது. அவர்களோடு ஓரளவுக்குப் போட்டியிடவேண்டு என்பதற்காக அதை இரண்டு சத விகிதம் 'ஸிங்கிள் பாயிண்'டாகப் போட்டோம். வரியைக் குறைக்க வேண்டும் என்று கேட்டார்கள், அதற்காக ஒரு சத விகிதம் குறைத்தோம் என்ற முறையில் ஒரு சத விகிதம் இதற்கு வரியைக் குறைக்கவில்லை. பக்கத்தில் என்ன விதமாக இருக்கிறது, நாம் என்ன விதமான சலுகை கொடுத்தால் நம்முடைய ராஜ்ய 'பைபரு'க்கு ஒரு சலுகை ஏற்படும் என்பதை யொட்டி இரண்டு சத விகிதம் ஸிங்கிள் பாயிண்ட்டாகக் குறைத்து கொடுக்கப்பட்டிருக்கிறது. இதில் சிறிய தொழில்களில் இருக்கின்றவர்கள் பாதிக்கப்படுவார்கள் என்று சொல்வதற்கு ஆதாரம் இல்லை என்று நான் மீண்டும் கூற விரும்புகிறேன். இதுவும் வாட்டில் பார்க்கைப்போல் at the point of last purchase in the State கட்டத்தில் தான் போடப்பட்டிருக்கிறது. அந்தக் கட்டத்தில் ஏராளமாக வாங்குகின்றவர்கள் ஏற்றுமதி செய்கின்றவர்கள்தான். ஏற்றுமதி செய்கின்றதவர்கள் தான் அதைக் கொடுக்கும்படியாக இருக்கும். ஆகவே, தயவு செய்து இந்தத் திருத்தத்தை வாபஸ் பெறும்படியாகக் கேட்டுக்கொள்கிறேன்.

*Item 63—Sugarcane—Amendment* 185

SRI N. K. PALANISAMI : Sir, I move my amendment.

MR. SPEAKER : It has already been moved. The hon. Member can speak on it, if he wants. Is he going to speak on it?

SRI N. K. PALANISAMI : கனம் சபாநாயகர் அவர்களே, ஏற்கனவே மத்திய சர்க்காரில் இதற்கு எக்ஸைஸ் வரி போட்டிருக்கிறது. கரும்புக்கும் வரி சர்க்கரைக்கும் வரி என்று ஆய்விடும். முன்பு விவசாயி உற்பத்தி செய்கின்ற பொருளுக்கு விற்பனை வரியிலிருந்து விலக்கு அளிக்கப்பட்டிருக்கிறது. அப்படியிருக்கும் போது, இங்கே கரும்புக்கு வரி போடுவதில் என்ன அர்த்தம் இருக்கிறது என்று தெரியவில்லை. மேலும், கரும்பு நேரடியாக சர்க்கரை மில்லுக்குப் போவதில்லை. அங்கங்கே 'குர்' போன்று சர்க்கரை வெல்லம் செய்கிறார்கள். அப்படிப்பட்ட பொருளுக்கு அவசியம் விற்பனை வரி இருக்கக்கூடாது என்பது என்னுடைய திருத்தம். இதை ஏற்றுக் கொள்ளவேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன்.

14th February 1959]

SRI S. NAGARAJA MONIGAR : கனம் சபாநாயகர் அவர்களே, பொது வாகவே, இந்தக் கடைசியில் சொல்லப்பட்ட கரும்பு, பனை நார், உருளைக் கிழங்கு போன்றவை தவிர முதலாவது ஷெட்யூலில் வருகின்ற பண்டங்கள் அத்தனையும் மவுண்ட் ரோடிலுள்ள கம்பெனியில் வியாபாரம் செய்பவர் களோ பர்ஸ்ட் லேன் பீச்சிலுள்ள வியாபாரிகளோ கையாளும் பண்டங்க ளாக இருக்கின்றனவே தவிர, நேற்றையதினம் மெமோரியல் ஹாலில் தாலுகாக்களிலிருந்தும் ஜில்லாக்களிலிருந்தும் வந்துகூடி முறையிட்டுக் கொண்டிருந்த வியாபாரிகள் கருத்துக்கு இணங்கி அவர்கள் கோரிக் கொண்ட பண்டங்கள் இந்த ஒரு முனை வரியில் இருக்கின்றனவா என்று பார்க்கும்போது பெரும்பகுதி அப்படி இருப்பதாகத் தெரியவில்லை. மோட் டார்கள், மோட்டார் சைக்கிள்கள், ரேடியோ . . .

* SRI A. GOVINDASAMY : கனம் சபாநாயகர் அவர்களே, ஒரு ஒழுங்குப் பிரச்னை எழுப்ப விரும்புகிறேன். இப்பொழுது நாம் கரும்பு பற்றி பேசுகின்றபோது இதர பல பிரச்னைகளைப்பற்றி பேசலாமா என்று அறிய விரும்புகிறேன்.

MR. SPEAKER : கனம் அங்கத்தினர் ஸ்ரீ ஏ. கோவிந்தசாமி என்ன சொல்கிறார் என்றால், இதற்கு முன்பு 'ரூலிங்' கொடுத்ததற்கு மாறாக இப்பொழுது கனம் அங்கத்தினர் ஸ்ரீ நாகராஜ மணிகார் பேசுகிறாரே, அவருக்கு மட்டும் நான் சலுகை கொடுப்பதுபோல் அவரைப் பேசும்படி அனுமதிக்கலாமா என்பது. நான் இப்பொழுது ஸ்ரீ நாகராஜ் மணிகார் அவர்களை மேலும் சம்பந்தம் அல்லாத விஷயத்தைப்பற்றி பேசவேண்டாம் என்று கேட்டுக்கொள்கிறேன். 'தர்டு ரீடிங்'கிலே வேண்டுமானால் கனம் அங்கத்தினர் இப்படிப் பொதுவாகப் பேசலாம்.

SRI S. NAGARAJA MONIGAR : உருளைக் கிழங்கு ஒன்றுதான் இருக்கிறது.

THE HON. SRI R. VENKATARAMAN : கனம்சபா நாயகர் அவர்களே, கரும்பு சம்பந்தமாக சொல்லும்போது கடைசியில் வாங்குகிறவர்கள் கொடுக்க வேண்டும் என்று விதி போடப்பட்டிருக்கிறது. கடைசியில் வாங்குகிறவர்கள் சாதாரணமாக மில்காரர்கள் தான். சர்க்கரை உற்பத்தி செய்யக் கூடிய மில்காரர்கள் தான் வெல்லமாகக் காய்ச்சி வருகிறார்கள். அவர்களுக்குத்தான் பர்சேஸ் டாக்ஸ் போடப்பட்டிருக்கிறது. பர்சேஸ் பாயிண்டில் மூன்று சத விகிதம் போடப்பட்டிருப்பதால் யாரையும் பாதிக்காது. சாதாரணமாக சிறு தொழில் நடத்துகிறவர்களுக்கு இதனால் கஷ்டம் இருக்காது. அந்த முறை யில் தான் இந்த வரி விதிக்கப்படுகிறது. மில்காரர்கள் தான் இந்த வரி யைக் கொடுக்கப் போகிறார்கள். அதனால் ஒரு விதமான கஷ்டமும் இல்லை என்பதைத் தெரிவித்துக்கொள்ளுகிறேன். 11-50 a.m.

MR. SPEAKER : Sri S. M. Annamalai can now speak on his amendment relating to item No. 64 (186).

SRI S. M. ANNAMALAI : சட்ட மன்றத் தலைவர் அவர்களே, இது முக்கியமான திருத்தம். காரணம் என்னவென்றால், கனம் அமைச்சர் அவர்கள் பதில் சொல்லும்போது உருளைக் கிழங்குக்கு வரி போட்டால் அது விவசாயிகளை பாதிக்காது என்று சொன்னார். சாதாரணமாக வியா பாரிகள் பொருள்களை வாங்கும்போது சாமான் விலை, போக்கு வரத்து செலவு, அதன் பேரிலுள்ள விற்பனை வரி முதலியவைகளை கணக்குப் பார்த்துத்தான் வாங்குவார்கள். அதனால் விவசாயிகள் பாதிக்கப்பட மாட்டார்கள் என்று எப்படிச் சொல்லுகிறார் என்பதுதான் புரியவில்லை.

அடுத்தபடியாக உதகையானது ஒரு மங்கை, அந்த மங்கையின் அழகு அழிந்து போகிறது, அந்த அழகை மேலும் மேலும் பலப்படுத்த வேண்டும் என்று சொல்லி . . .

THE HON. SRI R. VENKATARAMAN : அவர் மங்கை, என்று சொல்லுகிறார், அது என்ன என்பது எனக்குப் புரியவில்லையே. (சிரிப்பு).

[14th February 1959

SRI S. M. ANNAMALAI : மங்கையின் அழகு அழிந்து போய் விட்டது, அந்த அழகை பலப்படுத்த வேண்டும் என்று சொல்லி உதகைக்குப் போய் சட்ட சபையை நடத்துவதைப்பற்றி யெல்லாம் நிதி அமைச்சர் குறிப்பிட்டார். அப்படி உதகையின் முன்னேற்றத்திற்கு பாடுபடுகிறவர்கள் அங்கே இருக்கக்கூடிய உருளைக்கிழங்கு விளைவிக்கக்கூடிய விவசாயிகளுக்கு இப்பொழுது வரி போடப் போகிறார்கள். அங்கேதான் அதிகப்படியான உருளைக்கிழங்கு உற்பத்தியாகிறது. இப்படி வரி போட்டால் அங்குள்ள மக்கள்தான் பாதிக்கப்படுவார்கள். உதகையையும், அங்கே இருக்கக்கூடிய மக்களையும் மேலும் மேலும் முன்னேற்றத்திற்கு கொண்டு வர வேண்டும் என்று சொல்லுகிற நேரத்தில் அவர்கள் விளைவிக்கக்கூடிய உருளைக் கிழங்குக்கு வரி போடுவது சரியல்ல. உண்மையிலேயே அங்கே இருக்கக்கூடிய மக்களை முன்னேற்றத்திற்குக் கொண்டு வரவேண்டும் என்று சர்க்கார் கருதினால் இந்த வரியை தள்ளுபடி செய்ய வேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன்.

SRI A. V. P. ASAITHAMBI : தலைவர் அவர்களே, உருளைக்கிழங்கிற்கு போடப்பட்டிருக்கும் வரியை அடியோடு நீக்கிவிட வேண்டும் என்று என்னுடைய கட்சிக்காரராகிய திரு. அண்ணாமலை அவர்களும், காங்கிரஸ் கட்சியைச் சேர்ந்த திரு. மாதா கௌடர் அவர்களும் ஒரு திருத்தம் கொடுத்திருக்கிறார்கள். அந்தத் திருத்தத்தை நானும் முழு மனதுடன் ஆதரிக்கிறேன். அப்படி ஆதரிக்கும்போது சில கருத்துக்களை அரசாங்கத்தின் கவனத்திற்குக் கொண்டுவர விரும்புகிறேன். உருளைக்கிழங்கு நீலகிரி மலையில் தான் அதிகமாகப் பயிரிடப்படுகிறது. அதிகமாக உற்பத்தியாகிறது. இது அனைவருக்கும் நன்றாகத் தெரியும். அங்கே இருக்கக்கூடிய மக்களின் வாழ்வை மிகவும் உயர்த்துவதாக சொல்லி இந்த வரியை விதிக்கிறோம் என்று சொல்வதில் இது ஒன்றாகும். இன்றைய தினம் அந்தப் பகுதியில் இருக்கக்கூடிய மக்களுக்கு அக்கரை காட்டவேண்டுமென்று அரசாங்கம் எடுத்துச் சொல்லி, அதன் காரணமாகத்தான் உதகைக்குக்கூட இந்த சட்டசபையைக் கொண்டு போய் நடத்துவது என்று இங்கே குறிப்பிட்டார்கள். உண்மையாகவே நீலகிரி மக்கள் மீது அரசாங்கத்திற்கு அக்கரை இருந்தால் இந்த உருளைக்கிழங்கு மீது விதிக்கப்போகும் விற்பனை வரியை அடியோடு ரத்து செய்துவிட வேண்டும். இந்தத் திருத்தத்தைக் கொண்டு வந்த காங்கிரஸ் கட்சி அங்கத்தினரும் அந்தப் பகுதியைச் சேர்ந்தவருமான திரு. மாதா கௌடர் அவர்கள் அரசாங்கம் தன்னுடைய திருத்தத்தை ஏற்றுக் கொள்ளுமோ அல்லது கொள்ளாதோ என்ற சந்தேகத்தில் இந்த அவையில் இப்பொழுது இல்லை. அவர் இல்லாவிட்டாலும் பரவாயில்லை. நீலகிரி மக்களுக்கு உண்மையிலேயே அக்கரை காட்ட வேண்டும் என்ற எண்ணம் அரசாங்கத்திற்கு இருந்தால் இந்த உருளைக்கிழங்கிற்குப் போடப்பட்டிருக்கும் வரியை உடனே ரத்து செய்ய வேண்டும் என்று அரசாங்கத்தை வற்புறுத்திக் கேட்டுக்கொள்ளுகிறேன்.

SRI M. R. KANDASWAMI MUDALIYAR: கனம் தலைவர் அவர்களே, உருளைக்கிழங்கிற்குப் போடப்படும் வரியினால் அதை விளைவிக்கக் கூடிய விவசாயிகளுக்கு எந்த விதத்திலும் பாதகம் ஏற்பட்டு விடாது. காரணம் சாதாரணமாக உருளைக்கிழங்கைச் சாப்பிடுகிறவர்கள் அதிகமாக இருக்க மாட்டார்கள் அத்துடன் கத்திரிக்காய் முதலிய சாதாரண காய்கறிகளுக்குக் கூட வரி விதித்திருக்கிறோம் இதைச் சாப்பிடுகிறவர்கள் பெரும்பாலும் ஏழைகளாகத்தான் இருப்பார்கள். உருளைக்கிழங்கைச் சாப்பிடுகிறவர்கள் சாதாரணமாக பருத்துத்தான் இருப்பார்கள். சாதாரண ஏழைகள் உருளை கிழங்கிற்கு வரி போட்டால் பாதிக்கப்பட மாட்டார்கள். ஓரளவு பருத்து நல்ல நிலைமையில் இருக்கக்கூடியவர்கள் தான் இதை ஆட்சேபிப்பார்கள், மற்றவர்கள் ஆட்சேபிக்க மாட்டார்கள். இப்பொழுது புஷ்பம், பழம் போன்றவைகளுக்கும் நாம் வரி விதிக்கும்போது உருளைக்கிழங்கிற்கு வரி விதிப்பதனால் ஒன்றும் பாதகம் இல்லை. அதனால் வரி வேண்டாம் என்று சொல்வது நியாயம் இல்லை. வரி போட்டால் தான் உதகையிலுள்ள மக்களை நல்ல முறையில் முன்னேற்ற மடையச் செய்வதற்கு சௌகர்யமாக இருக்கும், அந்தப் பணத்தைக்கொண்டு செலவு செய்வதற்கு. அவர்களை

**14th February 1959] [Sri M. R. Kandaswami Mudaliyar]**

நல்ல முறையில் வாழ வைப்பதற்கு வரி தேவையாக இருக்கிறது. அந்த முறையில் அதற்கு வரி இருக்க வேண்டியது அவசியமாக இருக்கிறது. அதனால் அதற்கு விதிக்கப்படப்போகும் வரியை நீக்க வேண்டியது அவசியம் இல்லை என்பதை கனம் அமைச்சர் அவர்களுக்குத் தெரிவித்துக் கொள்ளுகிறேன்.

* **SRI A. GOVINDASAMY :** தலைவர் அவர்களே, உருளைக் கிழங்கு விளையக்கூடிய பகுதியைச் சேர்ந்தவர் ஸ்ரீ மாதா கௌடர் அவர்கள். அவர் ஆளும் கட்சியைச் சேர்ந்தவர் தான். அவரே இந்தத் திருத்தத்தைக் கொடுத்திருக்கிறார். உதகைக்கு சட்டசபையைக் கொண்டுபோக வேண்டும் என்பதை ஆதரித்தவரே இந்த திருத்தத்தைக் கொடுத்திருக்கிறார். அந்த வரியை நீக்க வேண்டும் என்று அவர் சொல்வது போலவே எங்கள் கட்சியைச் சேர்ந்த ஸ்ரீ அண்ணாமலை அவர்களும் சொல்லுகிறார். அதையே நானும் கூறுகிறேன். உருளைக்கிழங்கை மரக்கறி சாப்பிடுகிறவர்களும் சாப்பிடுகிறார்கள் மரக்கறி சாப்பிடாதவர்களும் சாப்பிடுகிறார்கள். அதை, ஒல்லியாக இருக்கிறவர்கள் சாப்பிட்டால் பருமனாகி விடுவதற்கு முடியும். கனம் கந்தசாமியைப் போலுள்ளவர்கள் சாப்பிட்டால் அவர்களும் உருளைக் கிழங்கு மாதிரி பெருத்து விடலாம். அதனால் எல்லோரும் அதை உபயோகிக்கும் அளவில் அதற்கு வரி விதிக்கக்கூடாது. உருளைக்கிழங்கிற்கு வரி விதிக்காமல் இருந்தால் அங்குள்ள விவசாயிகள் நல்ல முறையில் இருக்க வசதியாக இருக்கும். வரி விதித்தால் அதிகமாக விலை கொடுத்து வாங்க வேண்டியதாக இருக்கும். அதனால் இங்குள்ளவர்களுக்குப் பாதகம் ஏற்படும். அதனால் அதற்கு விதிவிலக்கு அளிக்க வேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன்.

**SRI S. NAGARAJA MONIGAR :** கனம் தலைவர் அவர்களே, இந்த திருத்தத்தைக் கொடுத்த ஸ்ரீ மாதா கௌடர் இங்கே இல்லை என்று குறிப்பிட்டார்கள். அப்படிச் சொன்னவர்களுக்கு ஒரு விஷயத்தைச் சுட்டிக்காட்ட விரும்புகிறேன். உருளைக்கிழங்கை நீலகிரியில் உற்பத்தி செய்கிறார்கள் என்பது வாஸ்தவம்தான். அங்குள்ள உற்பத்தியாளர்களுக்கு வரி விதித்தாலும்கூட அங்கு உற்பத்தியாகும் உருளைக்கிழங்கு பெரும் பகுதியான வியாபாரம் முக்கியமாக விருதுநகர், சென்னை போன்ற இடங்களுக்கு கொண்டுபோய்தான் வியாபாரம் செய்யப்படுகிறது. அங்கேயே எல்லாம் வியாபாரம் செய்யப்படுவது இல்லை. இதைப்பற்றி குறிப்பிட நாம் கடமைப்பட்டிருக்கிறோம். இதைச் சர்க்காருக்குச் சுட்டிக்காட்டி அதற்கு வேண்டிய நடவடிக்கையை எடுத்துக்கொள்ளுமாறு சர்க்காரை நான் கேட்டுக்கொள்ளுகிறேன்.

* **THE HON. SRI R. VENKATARAMAN :** கனம் சபாநாயகர் அவர்களே, எல்லா காய்கறிப் பண்டங்களுக்கும் நாம் வரி விதிக்கிறோம். அதே மாதிரி காய்கறிப் பண்டங்களில் சேர்ந்த உருளைக்கிழங்குக்கும் வரி விதிக்கப்படுகிறது. இதுவும் மூன்று கைகள் மாறுகிறது, அதாவது மல்டி பாயிண்ட் டாக்ஸில் வருகிறது. அதாவது உற்பத்தி செய்கிறவர், மொத்த வியாபாரி, சில்லரை வியாபாரி ஆக மூன்று கைகள் மாறுகிறது. (குறுக்கீடு). **Now I am talking of the three transaction.**

அதனால் அந்த அளவுக்குக் குறைந்திருக்கிறது. மற்ற காய்கறி பண்டங்களும் மூன்று கைகள் மாறுகின்றன. சாதாரணமாக மொத்த வியாபாரி, சில்லரை வியாபாரி, அடுத்தபடியாக செலவழிப்போர். அதனால் தான் அவைகளுக்கு பர்ஸ்ட் பர்சேஸ் என்று சொல்லி வரி விதிக்கப்படுகிறது. அதுவும் 2 பர்செண்ட் விதிக்கப்பட்டிருக்கிறது. பெருவாரியான உருளைக்கிழங்கு வெளி ராஜ்யங்களுக்குப் போவதால் அதற்கு வரி விதிக்காவிட்டால் இங்கு அதன் மூலம் வரக்கூடிய வருமானம் போய்விடும். அதனால்தான் பர்ஸ்ட் பர்சேஸ் என்று போடப்பட்டிருக்கிறது. அப்படிப் போடாவிட்டால் இங்கு ஏஜெண்ட்களை வைத்து எல்லாவற்றையும் வெளி ராஜ்யங்களுக்குக் கொண்டு போய் நமக்கு வரி கொடுக்காமல் தப்பித்துக்கொள்ளுவார்கள். இதனால் ஒன்றும் கஷ்டமில்லை. அடுத்தபடியாக உதகைக்குச் சலுகை கொடுக்க வேண்டும் என்று சொன்னது எனக்கு

[Sri R. Venkataraman] [14th February 1959

ரொம்பவும் பிடித்தமாக இருந்தது. இப்படிச் சொல்லியதால் எதிர் கட்சிக்காரர்களுடைய மனம் மாறிக்கொண்டு வருகிற மாதிரி தோன்றுகிறது. அதனால்தான் அவர்கள் உதகைக்கு ஏதாவது நன்மை செய்ய வேண்டுமென்று சொல்ல முற்பட்டிருக்கிறார்கள். இன்னும் ஏப்ரல் மாதத்திற்குள் அவர்களுடைய மனம் மாறுதல் நல்ல முறையில் அடைந்துவிடும் என்று நினைக்கிறேன். அதற்கு வேண்டிய அவகாசம் இருக்கிறது. ஏப்ரல் 20-ம் தேதி வரைக்கும் அவர்களுக்கு மனம் மாறுவதற்கு அவகாசம் இருக்கிறது. அதற்குள் அவர்களுடைய மனம் மாறி எவ்வளவோ இம்ப்ரூவ்மெண்டுக்கு இடம் இருக்கிறது அப்படிப்பட்ட இம்ப்ரூவ்மெண்ட் வந்திருப்பதால்தான் அவர்களுக்கு வரி போடுவதைககூட வேண்டாம் என்று சொல்லுகிறார்கள். உருளைக்கிழங்கு வகையில் மனம் மாற்றம் ஏற்பட்டிருப்பது போன்று மற்றவைகளிலும் மனமாற்றம் ஏற்பட்டுவிடும் என்று நினைக்கிறேன். அந்த அளவில் அவர்கள் ஒத்துழைத்ததற்கு அவர்களை நான் பாராட்டுகிறேன்.

12 noon MR. SPEAKER : Hon. members must tell me whether they are withdrawing their amendments or not, in view of the detailed discussion and reply of the Hon. Minister, instead of my putting to the Vote of the House all the amendments, taking up the time of the House. Let the hon. members please tell me as to which amendments they are not pressing.

The amendments of Sri K. Sattanatha Karayalar relating to item 15 and that of Sri A. Govindasamy relating to item 20 were put and lost.

MR. SPEAKER : The question is—

Item 21 shall be deleted and the remaining items shall be renumbered.

The amendment was put and carried.

Sri N. K. Palanisami's amendment relating to items 21 to 23, 25, 27, 30, 31, 35, 52 and 58 was, by leave withdrawn.

The amendment of Sri S. M. Annamalai relating to items 21 and 36 and that of Sri A. Govindaswamy relating to items 21 and 22 were put and lost.

The amendment of Sri T. S. Ramaswamy Pillai relating to item 22 was, by leave, withdrawn.

The amendment of Sri N. K. Palanisami relating to item 22 was put and lost.

The amendment of Sri M. S. Selvarajan relating to item 27, and the amendments of Sri N. K. Palaniswamy relating to items 27 and 28 were by leave, withdrawn.

MR. SPEAKER : The question is—

In item 28, in column (4), *for* the figure " 6 ", *substitute* the figure " 3 ".

The amendment was put and carried.

14th February 1959]

The amendment of Sri S. M. Annamalai relating to item 36 was put and lost.

The amendment of Sri T. S. Ramaswamy Pillai relating to item 36 and the amendments of Sri K. Sattanatha Karayalar relating to items 36 and 38 were, by leave, withdrawn.

The amendment of Sri N. K. Palanisami relating to item 38 was put and lost.

The amendment of Sri S. M. Annamalai relating to item 42 was put and lost.

The amendment of Sri K. Sattanatha Karayalar relating to item 45 was put and lost.

The amendment of Sri N. K. Palanisami relating to item 46 was, by leave, withdrawn.

The amendments of Sri K. Sattanatha Karayalar relating to items 53 and 60 were put and lost.

The amendment of Sri M. J. Jamal Moideen was deemed withdrawn, as the hon. member was not in his seat.

SRI M. S. SELVARAJAN : As the Government themselves have given an amendment in this regard, I am not pressing my amendment relating to item 62.

The amendment was, by leave, withdrawn.

The amendment of Sri T. S. Ramaswamy Pillai relating to item 62 and that of Sri N. K. Palaniswamy relating to item 62 were put and lost.

MR. SPEAKER : The question is—

"In column (4), against item 62, *for* the number "3", *substitute* the number "2".

The amendment was put and carried.

The amendment of Sri N. K. Palanisami relating to item 63 was put and lost.

MR. SPEAKER : The question is—

"*Omit* item 64".

The amendment was put and declared lost.

A poll was demanded on this amendment.

(The Division bell was rung.)

THE HON. SRI R. VENKATARAMAN : May I explain to the hon. members that if the amendment is accepted, then it will come under the multi-point tax and the tax will become more?

The amendment was again put and lost.

The amendment relating to item 64 of Sri T. S. Ramaswami Pillai was put and lost.

The First Schedule, as amended, was put and carried.

*The Second Schedule.*

MR. SPEAKER : The motion is—

" That the Second Schedule do stand part of the Bill ".

SRI N. MARUDACHALAM : Sir, I move—

In item 4, column (4), *for* the figure " 2 ", *substitute* the figure " 4 ".

SRI K. SATTANATHA KARAYALAR : I second the amendment.

MR. SPEAKER : You want to increase the tax? இரண்டாவது ஷெட்யூலில் 4-வது ஐட்டத்தில், 4-வது கலத்தில் இருக்கிற " 2 " என்பதை " 4 " என்று மாற்றவேண்டுமென்று இருக்கிறது. வேண்டும் என்றால் பேசுங்கள். இல்லாவிட்டால் விட்டு விடுங்கள். [The hon. Member wants to raise the tax.]

SRI N. MARUDACHALAM : இரும்பு சாமானாக இருக்கிற சாதனங்களுக்கு எல்லாம் அதிகப்படி வரி விதிக்க வேண்டுமென்று திருத்தம் கொடுத்திருக்கிறேன். அதற்கு அதிக வரி போடுவதால் கெட்டு விடாது. விவசாயிகளுக்குக் கொடுக்கக்கூடிய சாதனங்களுக்கு குறைவான வரி போட்டு, மற்ற மோட்டார் போன்றவற்றுக்குப் பயன்படும் சாமான்களுக்கு அதிக வரி போடப்பட வேண்டும் என்பது என்னுடைய திருத்தம்.

SRIMATHI T. N. ANANDANAYAKI : கனம் சபாநாயகர் அவர்களே, இதற்கு 2 சத விகிதம் அதிகமாக வரி போடவேண்டும் என்று சொல்வது வியக்கத் தக்கதாக இருக்கிறது. இந்த " அயர்ன் அண்டு ஸ்டீல் " என்பது பெரிய வியாபாரிகளுக்கும், பெரும் பணக்காரர்களுக்கும் மட்டும் தேவையானது அல்ல. சிறு சிறு தொழிலில் ஈடுபட்டிருக்கக் கூடியவர்கள்கூட மிகவும் கஷ்டப்பட்டு வாங்கிக் கொண்டிருக்கிறார்கள். இந்தப் பொருள்களுக்கு மத்திய அரசாங்கம் வேறு வரி போடுகிறது. ஆகவே இவற்றை அதிகக் கஷ்டப்பட்டு வாங்கிக் கொண்டிருக்கிறோம். எங்களைப்போன்ற பெண்கள் ஸ்டீலில் இருந்து செய்யப்படும் எவர் ஸில்வர் பாத்திரங்களைப் பயன்படுத்திக்கொண்டிருக்கிறோம். ஏற்கனவே எவர் சில்வர் பாத்திரங்கள் பவுண்டு 12 ரூபாய் 14 ரூபாய் என்று விற்கப்படுகிறது. மேலும் இதன் வரியை உயர்த்தினால் பெண்களாகிய நாங்கள் மிகவும் பாதிக்கப்படுவோம். பித்தளைப் பாத்திரங்களைக் கழுவுவது, ஈயம் பூசுவது ஆகிய கஷ்டங்களிலிருந்து விடுபடவே இந்தப் பாத்திரங்களைப் பெண்கள் அதிகமாக வாங்கி அழகாக வீடுகளில் வைத்திருக்கிறார்கள். இல்லக் கிழத்திகளுக்கு இன்றியமையாத எவர் சில்வர் பாத்திரங்களைச் செய்யப் பயன்படும் இரும்புக்கு வரியைக் குறைக்கவேண்டி இருக்க, 4 சதவிகிதம் ஆக்குங்கள் என்று அங்கத்தினர் திருத்தம் கொடுக்கிறார். ஏற்கனவே இது சரியான முறையில் கொடுக்கப்படாததால் தவறான முறையில் வாங்கி எவர் சில்வர் பாத்திரங்களை இரண்டு மடங்கு விலைக்கு விற்கிறார்கள். இந்த இனத்தில் வரியை உயர்த்துங்கள் என்று சொல்லுபவர் ஏதோ விரதம் எடுத்து, பெண்கள் இந்தப் பாத்திரங்களை வாங்கக் கூடாது என்ற எண்ணத்துடன் திருத்தம் கொடுத்திருக்க வேண்டும் என்று எண்ணத் தோன்றுகிறது. இது தவறானது. இரண்டு சதவிகிதம் போட்டிருப்பதே அதிகம். அதைக் குறைத்தால் வரவேற்கிறேன். இல்லாவிட்டால் அது அப்படியே இருக்கட்டும்.

14th February 1959]

*THE HON. SRI R. VENKATARAMAN : கனம் சபாநாயகர் அவர்களே, இது 'Declared goods' அதாவது 'Inter-state trade and commerce' அத்தியாவசியமான பொருள்கள் என்று மத்திய சர்க்காரால் நிர்ணயிக்கப்பட்ட பண்டங்களில் ஒன்று. இதற்கு எல்லா ராஜ்யங்களிலும் ஒரேவிதமான வரி விதிக்கப்படவேண்டும். பொதுவாக "வரியை அதிகப்படுத்துவது" என்று இந்த விதமாக திருத்தம் கொடுக்கக்கூடாது. "மணி பில்" களுக்கு வரியை அதிகப்படுத்த வேண்டுமென்று திருத்தம் கொடுப்பதற்கு கவர்னருடைய "ரெகமன்டேஷன்" வேண்டும். குறைக்க வேண்டுமென்பதற்கு "ரெகமன்டேஷன்" தேவை இல்லை. இது சட்ட சபையில் தெரிந்துகொள்ள வேண்டியது என்ற காரணத்தினால் சபையின் கவனத்திற்குக் கொண்டுவர விரும்புகிறேன்.

Article 207 (1) of the Constitution reads thus :

A Bill or amendment making provision for any of the matters specified in sub-clauses (*a*) to (*f*) of clause (1) of article 199 shall not be introduced or moved except on the recommendation of the Governor, and a Bill making such provision shall not be introduced in a Legislative Council :

Provided that no recommendation shall be required under this clause for the moving of an amendment making provision for the reduction or abolition of any tax.

குறைப்பதற்குத்தான் திருத்தம் கொடுக்கலாமே தவிர, அதிகமாக்க வேண்டும் என்று திருத்தம் கொடுப்பது தவறு. அதற்குக் கவர்னருடைய சிபாரிசு வேண்டும் என்று தெரிவித்துக் கொள்கிறேன்.

MR. SPEAKER : I uphold the point of order raised by the Hon. Minister and rule the amendment of Sri N. Marudhachalam out of order. (Sri A Govindasamy rose). An amendment proposing 12-10 p.m.
an increase of tax requires the consent of the Governor. That has not been obtained. I agree with the Hon. Minister. I support the point of order and rule the amendment out of order.

The Second Schedule was put and carried.

*The Third Schedule.*

SRI G. G. GURUMURTHI : Sir, I move—

In item 4, *omit* the word "carpets" within the brackets, and *after* item 7, *add* the following item, viz. :—

'8. Carpets'.

The amendment was duly seconded.

MR. SPEAKER : Amendment No. 195. Sri N. Marudachalam will move his amendment.

SRI A. GOVINDASAMY : Amendment 191 stands in my name. I may be allowed to move my amendment now.

MR. SPEAKER : Amendment 191 relates to item 7, but amendment 195 relates to item 5. Therefore, I take amendment 195 earlier.

SRI N. MARUDACHALAM : Sir, I move—

In item 5, *omit* the words " Sugar including ".

The amendment was duly seconded.

SRI A. GOVINDASAMY : Sir, I move—

*After* item 7, *add* the following items, viz. :—

" 8. All foodgrains namely, rice, wheat, paddy, cholam, cumbu. ragi, thinai, varagu, samai and milk, fresh fruits, betel, plantain leaves, flowers, eggs, meat and fish."

The amendment was duly seconded.

SRI K. SATTANATHA KARAYALAR : Sir, I move—

*After* item 7, *add* the following items, viz. :—

" 8. Foodgrains.

9. Flowers.

10. Wattle bark.

11. Palmyra fibres and stalks ".

The amendment was duly seconded.

SRI T. S. RAMASWAMY PILLAI : Sir, I move—

*After* item 7, *add* the following items :

" 8. Foodgrains and pulses and vegetables and milk.

9. Chemical fertilizers and Bonemeal.

10. Firewood ".

The amendment was duly seconded.

*SRI G. G. GURUMURTHI : தலைவர் அவர்களே, இந்த மூன்றாவது ஷெட்யூல் நான்காவது பிரிவில்—ஜமக்காளம் நீங்கலாக—என்று இருப்பதினால் ஜமக்காளத்திற்கு வரி விதிக்கப்படுமோ என்கிற சந்தேகத்தில் நான் என் திருத்தத்தைக் கொடுத்திருக்கிறேன். ஜமக்காளத்திற்கு வரி விதிக்கக் கூடாது என்று நான் கேட்டுக்கொள்கிறேன்.

THE HON. SRI R. VENKATARAMAN : கைத்தறியினால் செய்யப்பட்ட ஜமக்காளத்திற்கு வரி விலக்கு உண்டு. மற்ற ஜமக்காளங்களுக்கு வரி உண்டு.

MR. SPEAKER : May I ask the Hon. Minister whether he would like to follow the procedure that was adopted in regard to the First Schedule or he would like to reply to the discussion on all the amendments as a whole at the end?

THE HON. SRI R. VENKATARAMAN : I would reply to all the amendments as a whole.

* SRI A. GOVINDASAMY : தலைவர் அவர்களே, மீண்டும் உணவுப் பொருள்கள் மீது விதிக்கின்ற வரியை நீக்கவேண்டுமென்று அமைச்சர் அவர்களைக் கேட்டுக்கொள்ள விரும்புகிறேன். குறிப்பாக அரிசி, நெல், சோளம், கம்பு, ராகி, தினை, வரகுபோன்ற உணவுப்பொருள்கள்

14th February 1959] [Sri A. Govindasamy]

மீதும், அழுகும் பொருள்களான முட்டை, வெற்றிலை, பூ போன்ற பொருள்களுக்கும் விலக்கு அளிக்க வேண்டுமென்று நான் கேட்டுக் கொள்கிறேன்.

உணவுப் பஞ்சம் ஏற்படுகிறபோது மீன் நல்ல சத்துள்ள பொருளாக, உணவு நெருக்கடியைத் தீர்ப்பதற்கு உபயோகப்படுவதனால் இதற்கும் வரி விதிக்கக்கூடாது. விவசாயிகள் உபயோகிக்கக் கூடிய உரம், பிண்ணாக்கு போன்றவற்றுக்கும் வரியை நீக்கவேண்டுமென்று பலதரப்பட்ட உறுப்பினர்கள் எடுத்துச் சொல்லியிருக்கிறார்கள். கடைசியாக நான் கூற விரும்புவது தைத்த பனியன்கள் மீது போட்டு இருக்கிற வரியை நீக்க வேண்டும் என்பது. ஹோல்சேலாக கைத்தறிக்கு விலக்கு அளித்திருப்பதில் இதுவும் சேர்க்கப்பட்டிருக்க வேண்டும். இல்லாத காரணத்தினால் பனியன் உற்பத்தியாளர்கள் பாதிக்கப்படுவார்கள். சட்டை போட முடியாதவர்கள் பனியனாவது போட்டுக்கொள்ளலாம் என்றால் பனியன் விலையும் உயர்ந்து விடக்கூடும். இதற்கு வரி போடுவது அதிகமாக ஏழைகளைப் பாதிக்கும். மீண்டும் இதைப் பரிசிலனை செய்யவேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன்.

**SRI T. S. RAMASWAMY PILLAI :** குறிப்பாக இந்த ஷெட்யூலில் உணவு தானியங்கள், காய்கறிகள், பால், கெமிகல் பர்டிலிசைர்ஸ், போன்மில், பயர்வுட் இவைகளுக்கு விலக்குக் கொடுக்கவேண்டுமென்று சொல்லியிருக்கிறேன். வரி விதிப்புக் கொள்கைகளைப் பொருத்த அளவில் உன்னதமான பெரிய புதுக் கருத்துக்கள் ஒன்றையும் அரசாங்கம் கையாளவில்லை. நமக்கு வேண்டியது ரெவின்யூதான் என்கிற அளவில் கையாளப்படுகிற கொள்கை தப்பு. டாக்டர் லோகநாதன்கூட மக்களுக்கு வசதி செய்ய வேண்டும், அவர்களுடைய பளுவைக் குறைக்க வேண்டும் என்கிற உன்னதமான அடிப்படையில்தான் உணவுப் பொருள்களுக்கு ½ சதவீதம் வரி என்று சிபார்சு செய்திருக்கிறார் என்று நினைக்கிறேன். இல்லாவிட்டால் அவற்றுக்கு 7 சத விகிதம் போடலாம் என்று சிபார்சு செய்திருக்கக் கூடும். நாங்களும் அந்த உன்னதமான தத்துவத்தின் அடிப்படையில்தான் பேசுகின்றோம். ஆளும் கட்சியினரும் சோஷலிஸ்ட்டிக் பாடர்ன் ஆப் சொஸைடிதான் வரவேண்டுமென்று கூறுகிறார்கள்.

ஆகவே இந்த அடிப்படையில் நான் கொடுத்திருக்கக் கூடிய திருத்தத்தை ஏற்றுக்கொண்டு இவைகளுக்கு விலக்கு அளிக்க வேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன்.

**SRI K. SATTANATHA KARAYLAR :** ஏற்கனவேயே செக்ஷன் 3-லே உள்ள பிரொவைசோ (1) ஐ நீக்கிவிடவேண்டுமென்று நாங்கள் கொடுத்திருந்த திருத்தத்தை சர்க்கார் ஏற்றுக்கொள்ளாத காரணத்தினால், அதை ஒட்டி இந்தத் திருத்தத்தையும் வற்புறுத்தக்கூடாது என்று பதில் சொல்லிவிடுவார்களோ என்று அஞ்சினேன். அப்படி இல்லாத காரணத்தினால் கனம் அமைச்சர் அவர்களை இந்த ஷெட்யூல் (3) இன் கடைசியில் 7-வது, பிரிவாக உணவு தானியங்கள், பூ, வாட்டில் பார்க், பல்மைரா பைபர்ஸ் ஸ்டாக்ஸ்—இவற்றையும் சேர்த்து விலக்கு அளிப்பதைப் பற்றி யோசிக்க வேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன். இதனால் மிகப் பெரிய கஷ்டம் வந்துவிடாது. இந்த இனங்களில் மொத்த வருமானம் நம் சர்க்காருக்கு என்ன, இவற்றுக்குப் பூரண விலக்கு அளிப்பதால் என்ன குறையும் என்கிற புள்ளி விவரம் தெரிந்தால் நன்மை பயக்கும். அதேபோன்று ஜமக்காளத்திற்கு விலக்கு கொடுக்கவேண்டும் என்றும் சொல்லியிருக்கிறார்கள். கைத்தறி ஜமக்காளத்திற்கு வரி கிடையாது என்று அமைச்சர் சொன்னார். கைத்தறி மெத்தைக்கும் விலக்குக் கொடுக்கவேண்டும். அம்மாதிரி விலக்கு இருக்கிறதா என்று அறிய அவாவுறுகிறேன். அப்படிச் செய்தால் இது நன்மை பயக்கக் கூடிய ஒரு முறையாக அமையும் என்று சொல்ல விரும்புகிறேன்.

[14th February 1959

SRI S. LAZAR : கனம் சபாநாயகர் அவர்களே, கைத்தறி ஜமக்காளங்கள் பற்றிப் பேசும்போது அமைச்சர் குறிப்பிட்டார்கள். The item reads "All varieties of textiles (other than duoris, carpets...." கைத்தறியில் செய்யப்பட்ட ஜமக்காளங்களுக்கு வரி இல்லை என்பதை நான்காவது பிரிவிலிருந்து பார்க்கும்போது அது அமைய வில்லை. நான்காவது—

"Instead of handloom cloth," it should be "Handloom textiles" ஒருவேளை 7-வது பிரிவில் ஹாண்டுலூம் க்ளாத் என்று போட்டிருப்பதிலேயே இது சேர்ந்துவிடும் என்ற முறையில் விடப்படிருந்தால் அதில் ஒரு சிறிய திருத்தத்தைச் செய்ய விரும்புகிறேன். ஹாண்டுலூம் டெக்ஸ்டைல் என்று போட்டுவிட்டால் கைத்தறி மூலம் செய்யப்படுகிற எல்லாப் பொருளும் வந்துவிடும் என்று நான் சொல்ல விரும்புகிறேன். இதையும் கவனித்து அமைச்சர் அவர்கள் செய்ய வேண்டும் என்பதாகக் கேட்டுக் கொள்கிறேன்.

When there is a specific inclusion of carpets, and that too of all varieties, the interpretation will be that all kinds of carpets will have to be taken out of this Schedule and therefore will be liable to be taxed.

இதை ஏற்றுக்கொள்ளவேண்டும் என்பதாகக் கேட்டுக்கொள்கிறேன்.

SRI M. R. KANDASWAMY MUDALIYAR : கனம் சபாநாயகர் அவர்களே, ஜமக்காளங்களுக்கு வரி விதிக்கப்படுகிறது. அமைச்சர் அவர்கள் 12-20 p.m. பரிசீலனை செய்து இதற்கு விதிவிலக்கு அளிக்கவேண்டுமென்று கேட்டுக் கொள்ளுகிறேன். பொதுவாக புண்ணாக்கிற்கு வரி விதிக்கப்படுவது விவசாயிகளை மிகவும் பாதிக்கும். இது விவசாயிகளுக்கு மிகவும் அத்யாவசியமான பொருள். இது மாடுகளுக்கும் உபயோகப்படுத்தப்படுகிறது. விவசாயிகள் உரமாகவும் உபயோகப்படுத்துகிறார்கள். ஆகவே இதற்கு விதிவிலக்கு அளிக்கவேண்டுமென்று கேட்டுக்கொள்ளுகிறேன்.

*SRIMATHI T. N. ANANDANAYAKI : கனம் சபாநாயகர் அவர்களே, பவானி ஜமக்காளம், பூ போன்றவைகளுக்கு விதிவிலக்கு அளிக்கவேண்டுமென்று திருத்தங்கள் கொடுத்திருக்கிறார்கள். பொதுவாக பூ, புடவை என்றாலே பெண்களுக்கு மிகவும் விருப்பமான பொருள் என்று எல்லோரும் எண்ணுவதுண்டு. ஆர்ட்டிபிஷியல் சில்க், கோரா சில்க், நைலான் சில்க் முதலிய நூல்களை கைத்தறி ஆடைகளை ஊக்குவிப்பதற்காகவே, விற்பனையாகும் என்பதற்காகவே கைத்தறி துணியில் சேர்த்து நெய்கிறார்கள். ஆகவே இதற்கும் விதிவிலக்கு அளிக்கப்படவேண்டுமென்று குறிப்பிட்டார்கள். பல அங்கத்தினர்கள் புண்ணாக்கு கிராமங்களிலே விவசாயிகளுக்கு மிகவும் அத்தியாவசிய பொருள் இது மாட்டிற்கும் உபயோகப்படுகிறது, உரமாகவும் பயன் படுத்துகிறார்கள் என்று பேசியிருக்கிறார்கள். பெண்கள் மிகவும் விருப்பத்தோடு அணியக்கூடியது பூ. அழகும் மணமும் வாய்ந்த இப் பூ அதிக நேரம் இருக்காது. அதி சீக்கிரத்தில் வாடிவதங்கிவிடும். இதனால் வியாபாரிகள் ஒன்றும் பெரும் லாபம் அடைந்துவிட முடியாது. ஆகவே இதற்கு விதிவிலக்கு அளிக்கவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

* THE HON. SRI R. VENKATARAMAN : கனம் சபா நாயகர் அவர்களே, கைத்தறியில் நெய்யப்பட்ட ஜமக்காளமாக இருந்தால் அவைகளுக்கு செக்ஷன் 17 பிரகாரம் விலக்கு அளிக்கப்பட்டிருக்கிறது. ஆனால் ஆலையில் நெய்யப்பட்ட ஜமக்காளங்களுக்கு எந்த விதமான விதிவிலக்கும் அளிக்கப்படவில்லை. நைலான் சில்க், கோரா சில்க், ஆர்டிபிஷியல் சில்க் போன்றவைகள் பஞ்சு நூலுடன் இணைத்து கைத்தறியில் நெய்யப்பட்டால், கைத்தறி ஆடையாக மாறிவிட்டால் அதற்கு வரி கிடையாது. உணவுப் பொருளைப்பற்றிப் பேசும்போது புண்ணாக்கைப்பற்றி விஸ்தாரமாகப் பேசப்பட்டது. ஸ்ரீமதி அனந்தநாயகி அவர்கள் பூவைப் பற்றிப் பேசும்போது உண்மையாகவே எல்லோர் மனதையும் உருக்கிவிட்டது.

14th February 1959] [Sri R. Venkataraman]

ஆனால் 7-வது செக்ஷனைப் புரட்டிப்பார்த்தால் 30 ஆயிரத்துக்குமேலே வியாபாரம் செய்பவர்களுக்குத்தான் வரி விதிக்கப்படும் என்றிருப்பதனால் அவ்வளவு வியாபாரம் செய்வதற்குள் பூ ஒன்றும் வாடிவிடாது என்று சொல்ல விரும்புகிறேன்.

MR. SPEAKER : I think the amendments of Sri Govindasamy, Sri Sattanatha Karayalar and Sri T. S. Ramasamy Pillai for the addition of certain articles after item 7 are out of order, except perhaps the item relating to flowers, as the House has already passed certain clauses which cover those items or articles. The same applies to the amendment of Sri N. Marudachalam. So, I shall put Sri K. Sattanatha Karayalar's amendment relating to 'flowers' only to vote. The question is :

"*After* item 7, *add* the following item, viz.—
'8. Flowers' ".

The amendment was put and lost.

The amendment of Sri G. G. Gurumurthi was, by leave, withdrawn.

The Third Schedule was put and carried.

The Preamble and clause 1 were put and carried.

THE HON. SRI R. VENKATARAMAN : Sir, I move—

"That the Madras General Sales Tax Bill, 1958 (L.A. Bill No. 6 of 1958), as amended, be passed."

MR. SPEAKER : Motion moved—

"That the Madras General Sales Tax Bill, 1958 (L.A. Bill No. 6 of 1958), as amended, be passed."

This is the third reading of the Bill. Those who wish to take part in the discussion may do so now. But, let the speeches be brief and short.

SRI A. GOVINDASAMY : கனம் சட்டமன்றத் தலைவர் அவர்களே, இந்த விற்பனை வரியை முதல் முதலாகக் கொண்டுவரும் போது ராஜாஜி அவர்கள் மதுவிலக்கினால் ஏற்படக்கூடிய நஷ்டத்தை ஈடு செய்வதற்காக இந்த விற்பனை வரி கொண்டுவருவதாகச் சொன்னார்கள். அப்பொழுது அவர்கள் கொண்டுவந்த நேரத்தில் வியாபாரிகள் வந்து தங்களை பாதிக்கிறது என்று அவர்களிடம் முறையிட்டால் அதற்கு கனம் ராஜாஜி அவர்கள் "உங்களை ஒன்றும் இந்த வரி பாதிக்காது, உண்மையாக பாதிக்கப்படுகிறவர்களெல்லாம் வாங்குவோர்தான்" என்று சொல்லுவார்கள். வாங்குவோர்கள் வந்து அவர்களிடம் வந்து முறையிட்டால் "வியாபாரிகள்தான் பாதிக்கப்படுகிறவர்கள்" என்று சொல்லிவிடுவார்கள். ஆனால் மதுவிலக்கு கொண்டு வருவதினால் ஏற்படும் நஷ்டத்தை ஈடு செய்வதற்காக இந்த வரியைக் கொண்டுவருவதாகச் சொன்னார்கள். கிராமங்களில் நீர்ப்பாசனத் திட்டங்களுக்குப் பணம் தேவைப்படும்போது, அந்த அளவிற்கு வரி விதிக்கப்படுகிறது. இது எவ்வளவையும் கொடுக்கக்கூடிய காமதேனு கற்பக விருக்ஷம் என்று சொன்னார்கள்.

[Sri A. Govindasamy] [14th February 1959

மறுபடியும் வரி விதிக்கும்போது இது இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்திற்கு உபயோகப்படும் என்று சமாதானம் கூறி இதை எதிர்க்கக்கூடாது என்று சொன்னார்கள். பிறகு என். ஜி. ஓக்களுக்கு சம்பள உயர்வு அளிக்கவேண்டுமென்றால் அப்பொழுது இதே வரியை ஒத்துக்கொள்ள வேண்டுமென்று சொன்னார்கள். நீலகிரியில் உருளைக்கிழங்கு உற்பத்தி செய்யும் அபிவிருத்தி திட்டத்திற்கு பணம் வேண்டுமென்றால் உடனே விற்பனை வரி கொடுங்கள் என்று சொல்கிறார்கள். எல்லாத் திட்டங்களை
12-30 p.m. யும் நிறைவேற்றுவதற்கு வேண்டிய பணத்திற்காக வரி போடுகிறோம் என்று விற்பனை வரி ஒன்றையே சுட்டிக்காட்டும் நிலையில் இந்த அரசாங்கம் இன்று இருக்கிறது. மத்திய அரசாங்கத்திற்குப் போகும் பெரிய வரி இனங்களைத் தடுத்து நிறுத்தி நாம் எடுத்துக் கொண்டால் விற்பனை வரியை ஓரளவிற்குக் குறைக்க முடியும் என்பதை யாரும் மறுக்க முடியாது. உணவு தானியங்களின் மீது போடப்பட்டுள்ள வரியை நீக்க வேண்டும். இதை இந்தச் சபையில் பல ஆண்டுகளாக வற்புறுத்தி வந்திருக்கிறோம். அவைகளுக்கு அரசாங்கத்தார் விற்பனை வரியிலிருந்து விலக்களித்திருந்தால் அவர்களை கனம் அங்கத்தினர்கள் பாராட்டியிருப்பார்கள் என்பதில் சந்தேகம் இல்லை.

குடிசைத் தொழில்களுக்கு ஆக்கம் தரும் இந்த அரசாங்கம், பனை மரத்திலிருந்து செய்யப்படும் சாமான்களுக்கும் பனை ஈர்க்கிலிருந்து செய்யப்படும் சாமான்களுக்கும் விற்பனை வரியிலிருந்து விலக்கு அளிக்க வேண்டும் என்று சொல்லிக் கொள்கிறேன். சில பொருள்களுக்குக் விலக்கோ சலுகையோ கேட்டபோது, அவைகளுக்கு முதல் கட்டத்தில் தானே வரி விதிக்கப்படுகிறது என்றும், வேறு சில பொருள்களுக்கு கேட்டபோது கடைசிக் கட்டத்தில் தானே விதிக்கப்படுகிறது என்றும் சொல்லி கனம் அமைச்சர் அவர்கள் விலக்கோ சலுகையோ அளிக்க மறுத்தார்கள். அது எங்களுக்குத் திருப்தியளிக்கவில்லை. சிறு வியாபாரிகள் விற்பனை வரி உத்தியோகஸ்தர்களைக் கண்டு பயப்படுகிறார்கள். இந்த அதிகாரிகள் வியாபாரிகளிடமிருந்து கணக்குகளைப் பறிமுதல் செய்து, இவ்வளவு வியாபாரம் நடந்திருக்க வேண்டுமென்று தீர்மானித்து, தங்கள் இஷ்டம் போல் வரி விதிக்கிறார்கள். விதிவிலக்கு வரம்பை 10,000 ரூபாயிலிருந்து 30,000 ரூபாய்க்கு உயர்த்த வேண்டுமென்று கனம் அங்கத்தினர்கள் கேட்டபோது அதற்கு அரசாங்கத்தார் ஒத்துக்கொள்ளவில்லை. இரண்டுக்கும் நடுவில் 20,000 ரூபாய்க்காவது உயர்த்தியிருக்கலாம். அரசாங்கத்தார் அதையும் செய்யவில்லை. விற்பனை வரி இலாகாவில் இருக்கும் சாதாரண பியூனைப் பார்த்தால் கூட வியாபாரிகள் பயப்படுகிறார்கள். அரசாங்கத்திற்கு சிறு சேமிப்பு நிதி அவசியமானால், அவர்களை சிறு சேமிப்பு நிதியை வசூலிக்கும் பொறுப்பை ரெவின்யூ இலாகாவிலுள்ள கலெக்டரிடமோ ஆர்.டி.ஓ.-விடமோ ஒப்படைக்காமல் விற்பனை வரி இலாகாவிலுள்ள டி.சி.டி.ஓ.-விடம் ஒப்படைக்கிறார்கள் என்றால் இதற்குக் காரணம் என்ன ? விற்பனை வரி அதிகாரிகளைக் கண்டால் வியாபாரிகள் பயந்து போய்ப் பணம் கொடுக்கிறார்கள். பணம் கொடுக்காவிட்டால் அவர்களை என்ன செய்துவிடுவார்களோ என்ற பயம் வியாபாரிகளுக்கு இருக்கிறது. வியாபாரிகளைப் பயமுறுத்தக்கூடிய அளவிற்கு அவ்வளவு அதிக அதிகாரங்கள் அவர்களிடம் இருக்கக்கூடாது. கனம் அமைச்சர் அவர்கள் இந்த இலாகாவைக் கொஞ்சம் கூர்ந்து கவனிக்க வேண்டும். அதிகாரிகள் சிறிய வியாபாரிகளின் கடைகளிலும் வீடுகளிலும் புகுந்து அவர்களுடைய விற்பனைக் கணக்குகளைப் பறிமுதல் செய்கிறார்கள். ஆனால் பங்களாக்களிலுள்ள பெரிய வியாபாரிகளைப் பொறுத்த வரையில் அதிகாரிகள் அவ்வாறு செய்வதில்லை ; அவர்களுடைய முன் அனுமதியைப் பெற்ற பிறகு தான் அவர்களிடம் செல்கிறார்கள். சில சிறிய வியாபாரிகள் வீட்டின் முன்புறத்தில் கடையை வைத்துக்கொண்டு பின்புறத்தில் வசித்துவருகிறார்கள். அதிகாரிகள் விற்பனைக் கணக்குகளைப் பறிப்பதற்காக அவர்களுடைய வீடுகளுக்குள் எந்த நேரத்திலும் புகுந்து விடுகிறார்கள். விற்பனைக் கணக்குகளைப் பார்ப்பதற்காக வியாபாரிகளிடம் செல்லும் விஷயத்தில் பெரிய வியாபாரிகளானாலும் சரி, சிறிய வியாபாரிகளானாலும் சரி, எல்லா வியாபாரிகளையும் ஒரேமாதிரியாக நடத்த வேண்டும்.

வியாபாரிகளில் விதவைகள் போன்றவர்கள் விஷயத்தில், அதிகாரிகள் அவர்கள் கொடுக்கும் விற்பனைக் கணக்குகளை நம்பாமல் அதிக வரி போடுவதுடன், அதைக் கொடுக்க ஆட்சேபனைகள் கிளப்பினால் அவர்களைப் போலீஸாரிடம் ஒப்படைக்கப் போவதாகச் சொல்லி பயமுறுத்துகிறார்கள்; போலீஸ்காரர்கள் போலீஸ் ஸ்டேஷனில் என்ன செய்வார்கள் என்று சொல்லி பயமுறுத்துகிறார்கள். போலீஸ் உதவியையும் கொண்டு வியாபாரிகளைப் பயமுறுத்துகிறார்கள். உதாரணமாக, வளவனூரில் ஒரு சாதாரண விதவை அரிசி வியாபாரம் செய்துகொண்டிருந்தாள். அவள் இவ்வளவுதான் வியாபாரம் செய்திருப்பாள் என்று ஏதோ மதிப்பிட்டு அதிக வரி போட்டுவிட்டார்கள். அவள் அந்த வரி அதிகமானது என்று சொல்லி அதைக் கொடுக்க மறுத்தபோது போலீஸ் ஸப் இன்ஸ்பெக்டரைக் கொண்டு அவளை பயமுறுத்தியதுடன், அப்பீல் செய்ய விரும்பினால் வரியை உடனே செலுத்திவிட்டுப் பிறகு வேண்டுமானால் அப்பீல் செய்துகொள்ளலாம் என்று சொல்லியிருக்கிறார்கள். இதனால் வியாபாரிகள் பயப்படுகிறார்கள். இந்தக் கஷ்டங்களை நீக்குவதற்கு ஆவன செய்ய வேண்டும் என்று கனம் அமைச்சரைக் கேட்டுக்கொள்கிறேன்.

* SRI V. K. KOTHANDARAMAN : கனம் சபாநாயகர் அவர்களே, இப்போது விற்பனை வரி மசோதா நிறைவேறியிருக்கிறது. இப்பொழுது விற்பனை வரி அமைச்சர் என்ற முறையில் கனம் ஸ்ரீ ஆர். வெங்கடராமன் அவர்களைப் பாராட்ட முடியாது. சட்டம் சம்பந்தமாக அவரிடம் வருத்தத்தைத்தான் தெரிவிக்க வேண்டியிருக்கிறது. தொழில் அமைச்சர் என்ற முறையில் பல தொழில் மசோதாக்களை நிறைவேற்றிய போது அவரைப் பாராட்டினேன். ஆனால் இன்று விற்பனை வரி மசோதாவை நிறைவேற்றியுள்ள அவருக்கு வருத்தம்தான் தெரிவிக்க வேண்டியிருக்கிறது. காரணம், எதிர்க் கட்சிகள் சார்பில் சுமார் 200 திருத்தங்கள் இந்த மசோதாவிற்கு கொடுக்கப்பட்டிருந்தன.

ஆளும் கட்சி அங்கத்தினர்களாலும் எத்தனையோ திருத்தங்கள் கொடுக்கப்பட்டிருந்தன. அவை கணிசமான அளவிற்காவது ஏற்றுக்கொள்ளப்பட்டிருக்கிறதா என்று பார்த்தால் இல்லை என்றுதான் சொல்ல வேண்டியிருக்கிறது. விற்பனை வரி பொதுமக்களை மட்டுமன்றி வியாபாரிகளையும் மிகவும் பாதிக்கிறது என்ற அபிப்பிராயத்துடன், ஆளும் கட்சியிலுள்ள பெரிய பெரிய வியாபாரிகள் இந்த மசோதாவை வரவேற்கவில்லை ; அவர்கள் உள்ளூர, குமுறிக்கொண்டிருக்கிறார்கள்.

SRI M. R. KANDASWAMI MUDALIYAR : Sir on a point of order, ஒரு ஒழுங்குப் பிரச்னை. ஆளும் கட்சியிலுள்ள வியாபாரிகளின் மனது குமுறிக் கொண்டிருக்கிறது என்று கனம் அங்கத்தினர் சொல்வது அவ்வளவு உசிதமானது அல்ல என்று நினைக்கிறேன். ஒரு கட்சியைப்பற்றி இவ்வாறு சொன்னால், அந்தக் கட்சியினால் யார் யார் குமுறிக் கொண்டிருக்கிறார்கள் என்ற கேள்வி எழக்கூடும். அவர் இவ்வாறு பேசுவது சரியல்ல என்று நினைக்கிறேன்.

MR. SPEAKER : The hon. Member may proceed.

SRI V. K. KOTHANDARAMAN : It is not a point of order.

MR. SPEAKER : It is for me to say whether it is a point of order or not. I simply asked the hon. Member to proceed with his speech. That is all. It is not for the hon. Members to give the ruling. I would not allow that.

SRI V. K. KOTHANDARAMAN : உணவுப் பொருள்களுக்கு விற்பனை வரியிலிருந்து விலக்கு அளிக்கப்பட வேண்டும். அரிசியாக இருந்தாலும் சரி, ராகியாக இருந்தாலும் சரி, சோளமாக இருந்தாலும் சரி,

[Sri V. K. Kothandaraman] [14th February 1959

எல்லா உணவு தானியங்களுக்கும் ஒரே விகிதத்தில் வரி விதிக்கப்பட்டிருக்கிறது. இப்போது மைசூர், கேரளா முதலிய ராஜ்யங்களில் உணவு தானியங்களுக்கு விற்பனை வரியிலிருந்து விலக்கு அளிக்கப்பட்டிருக்கிறது.

THE HON. SRI R. VENKATARAMAN : Sir, I want to assure the House that Mysore is a deficit State with regard to food.

SRI V. K. KOTHANDARAMAN : ராகி சோளம் போன்றவைகளை ஏழைகள் உணவாக உபயோகித்துவருகிறார்கள். ஆகவே அரிசியையும் கோதுமையையும் தவிர இதர உணவுதானியங்களுக்கு விற்பனை வரியினின்றும் கண்டிப்பாக விலக்கு அளிக்க வேண்டுமென்று அசராங்கத்தாரைக் கேட்டுக்கொள்கிறேன்.

12-40 p.m. SRI K. SATTANATHA KARAYALAR : கனம் சபாநாயகர் அவர்களே இந்த சட்டத்தின் , பழைய சட்டத்திற்கு வருடந்தோறும் இரண்டு மூன்று திருத்தங்கள் வந்து கொண்டேயிருந்தன, அவைகளை எல்லாம் மாற்றி ஒட்டுமொத்தமாக பரிசீலனை செய்து ஒரு பெரிய மாறுதல் ஏற்படக்கூடிய அடிப்படையில் இந்த திருத்தங்கள் கொண்டு வருவதாக கொண்டுவரப் பட்டது. சிறு வியாபாரிகள் கஷ்டப் படக் கூடாது என்ற முறையில்தான் இந்தச் சட்டம் திருத்தியமைக்கப் படுவதாக கூறியுள்ளார்.

(Sri V. K. Kothandaraman in the Chair.)

அதோடு வியாபாரிகள் 'returns' முதலியன அனுப்பக் கூடிய முறையை எவ்வளவு எளிதாக்க முடியுமோ அவ்வளவு எளிதாக்கும் முறையில், கம்பவுண்டிங் முறை கொண்டுவரப் பட்டிருப்பதால், எவ்வளவு தூரம் வியாபாரிகளுக்குச் சௌகரியங்கள் அளிக்க முடியுமோ அந்தஅளவு அளிக்கும்பொருட்டு திருத்தங்கள் கொண்டு வரப்பட்டு நிறைவேறியிருக்கின்றன. ஆனால் ஸிங்கிள் பாயிண்ட் டாக்ஸ், அடிப்படையில் முதல் ஷெட்யூலின் அடிப்படையிலுள்ள வியாபாரிகளுக்கு பல சிக்கல்கள் விளைவிக்கும் என்று நினைக்கிறேன். ஆகவே, நடைமுறையில் இச்சட்டம் எப்படி நடக்கிறது என்று பார்த்து, அதை ஒரு வருடம் பார்த்து விட்டுப் பின்னர் இதைப் பரிசீலனை செய்வார்கள் என்று நான் எதிர்பார்க்கிறேன். முதல் ஷெட்யூலில் இருக்கக் கூடிய ஸிங்கிள் பாயிண்ட் டேர்ன் இனத்தில், மொத்த வியாபாரம் எவ்வளவு இருந்தபோதிலும் அந்தத் தீர்வை விகிதம் அமுலுக்கு வரும். சிறு சிறு வியாபாரிகள் பாதிக்கக் கூடிய நிலை ஏற்படலாம். ஆகவே தயவு செய்து இந்தச் சட்டத்தை அமுல் நடத்தக் கூடிய முறையில் சிறு வியாபாரிகள் மேல் ஒரு கண்ணோட்டம் வைத்து அவர்கள் பாதிக்கப் படாத நிலையில் இச்சட்டம் அமுல் நடத்தப்படவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். பிறகு, செக்ஷன் 17 படி சில பொருள்களுக்கு விதி விலக்கு கொடுக்கும்போது அதில் பரிசீலனை செய்யப்படவேண்டிய விஷயங்கள் பலதும் உண்டு. உதாரணமாக, இதற்கு முன்பு விற்பனை வரியில் ஒரு சிக்கல் இருந்தது. கார்ப்பட்டிற்கும், பெட் ஷீட்ஸ், ரக், போன்ற பொருள்கள் வரும்போது எது போர்வை, எது விரிப்பு இவைகளில் எதற்குத் தீர்வை உண்டு எதற்குத் தீர்வை இல்லை என்பதைப் பற்றித் தர்க்கம் வந்தது. விளிம்பு வெட்டித் தைக்கப் படாதது போர்வை என்று கூறியிருக்கிறார்கள். வூலன், அல்லது வூலன் அண்ட் காட்டன் இரண்டும் சேர்ந்து செய்யப்படும் பொருள்களுக்கு, போர்வையின் விளிம்பை வெட்டி தையல் செய்திருந்தால் அது விரிப்பாக மாறலாம் என்ற அடிப்படையில் அதற்குத் தீர்வை விதிக்க வேண்டிய நிர்ப்பந்தம் ஒரு சமயம் ஏற்பட்டது. இந்த மாதிரிப் பொருள்களுக்குக் குறைந்தது இன்ன விலைக்கு அதிகமாக இருந்தால் அதற்கு விதிவிலக்கு கொடுக்கப் படும் என்ற அடிப்படையை வைத்துக் கொண்டால் நன்றாகயிருக்கும். ஏனெனில் இதை உற்பத்தி செய்யக் கூடியவர்கள் ஒவ்வொரு பெயர்கள் இதற்குக் கொடுக்கிறார்கள். அதேபோல் கைத்தறிப் பொருள்களுக்கும், இதர பொருள்களுக்கும் விதிவிலக்கு கொடுக்கக் கூடியதை நல்ல முறையில் பரிசீலனை செய்து வியாபாரிகளுக்கும், பொதுமக்களுக்கும் அதிக தீமை விளைவிக்காதபடி அவைகளை மாற்றியமைப்பது மிகவும் நன்மை பயப்பதாகும்.

14th February 1959] [Sri K. Sattanatha Karayalar]

எல்லாவற்றிற்கும் மேலாக ஒரு ஆண்டு இந்தச் சட்டத்தை பரிசீலனை செய்து அதற்குப் பின்னுவது உணவு தான்யங்களைப் பொறுத்தமட்டில் விதி விலக்கு கொடுக்கலாமா என்பதைப் பரிசீலனை செய்யவேண்டுமென்று அமைச்சர் அவர்களை நான் பணிவோடு வேண்டிக் கொள்கிறேன். அடுத்தபடியாக, இதில் ரூள்ஸ் ப்ரெயில் சட்டம் செய்யும்போது சிறு வியாபாரிகளைப் பொறுத்த மட்டில் எந்த அளவு எந்தெந்தப் பொருள்களுக்கு விதிவிலக்கு கொடுத்தால் அவர்கள் பாதிக்கப்படாமல் இருப்பார்கள் என்பதைப் பரிசீலனை செய்து அதற்கான சட்ட திட்டங்கள் அமைக்கவேண்டுமென்று கூறிக் கொண்டு எனது உரையை முடித்துக் கொள்கிறேன்.

(Sri T. P. Elumalai was sitting on the seat of the Secretary to the Legislature and talking with the Assistant Secretary.)

SRIMATHI T. N. ANANDANAYAKI : Sir, I rise to a point of order. Can a Member of this House sit in the seat of the Secretary to the Legislature?

SRI S. LAZAR : அவைத் தலைவர் அவர்களே, இந்த மசோதா நிறைவேறக்கூடிய இந்த நேரத்தில் நான் எனது முடிவான சில கருத்துக்களைச் சொல்ல விரும்புகிறேன். எதோ கட்சி நோக்கத்திலோ அல்லது கட்சிக் கொள்கைகளின் அடிப்படையிலோ பார்க்கும்போது இது சரிவர அமையவில்லையென்று சொல்லமுடியுமே தவிர சட்டத்தின் அடிப்படையில் வியாபாரிகளின் நலனின் அடிப்படையில், சர்க்காருடைய வருமானம் குறையாமல் இருக்கவேண்டுமென்றதின் அடிப்படையில் இவைகளை வைத்துப் பார்க்கும்போது இப்பொழுது நாம் இயற்றியிருக்கும் சட்டம் சிறந்ததொரு சட்டம் என்பதை யாரும் மறுக்கமுடியாது. மற்ற ஏனைய சட்டங்கள் ஏற்பட்டதற்கு அல்லது ஏற்படுத்தப் பட்டதற்கு மாறாகவே இந்தச் சட்டத்தைப். பொறுத்தவரையிலே முதலிலேயே ஒரு நிபுணரை நியமித்து வேண்டிய குறிப்புகளைத் தயார் செய்து அதன் பிறகு சட்டரீதியாக ஒரு சட்டத்தை வகுத்து அதையும் ஒரு தனிக் குழுவிற்கு விட்டு அதை விடச் சிறப்பாக இந்த தனி குழுவிற்கு விடப் பட்ட நேரத்திலும் பொது மக்களைப் பொறுத்தவரைக்கும் அல்லது வியாபாரிகளைப் பொறுத்தவரைக்கும் என்னென்ன கஷ்டங்கள் இருக்கின்றன என்ற நோக்கத்தோடு ஒரு வருட காலம் நன்கு பரிசீலனை செய்து அதன் பிறகு கொண்டுவரக் கூடிய நேரத்தில் ஐந்து நாட்கள் அதுபற்றி விவாதம் நடத்திய பிறகு சட்டமாகப் போகும் இம்மசோதா உள்ளபடியே சிறந்தமுறையில் அமைந்திருக்கிறது என்று சொன்னால் அதில் எந்தவித கருத்து மாறுபாடும் இருக்க முடியாது. ஏற்கனவே இருந்த சட்டத்தைப் பார்த்தவர்களும், ஏற்கனவேயிருந்த கஷ்டங்களை நேரடியாகத் தெரிந்து கொண்டவர்களும் இந்தச் சட்டத்தின் நுட்பங்களையும் இதில் உள்ள சிறந்த அம்சங்களையும் நன்கு அறிந்து கொள்ள முடியும். இந்த வரிவிகிதம் மூன்று முறையாக பிரிக்கப்பட்டிருக்கின்றன, இந்தச் சட்டத்திலே, முதல் வகுப்பு, 64 வித பொருள்கள் ஒருமுனை வரிக்கு மாற்றுவது. அந்தப் பொருள்களுக்கு ஒருமுனை வரி விதித்தது, ஒன்று. இரண்டாவது வகுப்பு, 10,000 ரூபாய் வரையில் வியாபாரம் செய்யக் கூடியவர்களுக்கு வரி கிடையாது. மூன்றாவதாக, அழுகிப் போகக்கூடிய பொருள்களைப் பொறுத்தவரைக்கும் 30,000 ரூபாய் வரையில் விதிவிலக்கு கொடுத்து, அந்தப் பொருள்களின் வரி விகிதத்தைப் பொறுத்தவரைக்கும் மல்டி பாயின்ட்டில் 2 சத வீதம் அல்லது 1 சத வீதம் என்ற முறையிலே அந்தந்தப் பொருள்களுக்குத் தக்கவாறு நிர்ணயிக்கப்பட்டிருக்கிறது. இம்மூன்று முறைகளை செவ்வனே கையாண்டு இருப்பதால் நடைமுறையில் வரும்போது எந்த விதமான கஷ்டமும் இருக்காது என்று நான் தைரியமாகச் சொல்ல முடியும். அடுத்தாற்போல் நடைமுறையில் வரி விகிதத்தை எடுத்துப் பார்க்கும் போதுகூட, அதற்காக வகுத்திருக்கும் சட்டம் வியாபாரிகளைப் பொறுத்த வரைக்கும் எந்தவிதத் தொந்தரவும் இல்லாத முறையிலே அப்படியே தவறுதலான முறையில் தொந்தரவுகள் ஏற்படும்போது அதைத் தீர்த்துக்கொள்வதற்கு அல்லது மாற்றிக் கொள்வதற்கு அல்லது அது

[Sri S. Lazar] [14th February 1959

போன்ற கஷ்டங்களை நீக்கிக் கொள்வதற்கு வேண்டிய சிறந்த அம்சங்கள் இச்சட்டத்தில் உட்படுத்தப்பட்டிருக்கிறது. சிறந்த அம்சங்கள் என்று சொல்லும்போது, இரண்டு வகையான வரிகள் இதில் வகுத்துக் கொடுக்கப்பட்டிருக்கிறது. இலாகாவைப் பொறுத்த வரைக்கும், அதில் நம்பிக்கை இருக்கும் என்று சொன்னால் அதிகப்படி செலவில்லாமல் அவர்களின் சிரமத்தை நிவர்த்தி செய்து கொள்ளலாம். அதில்லாமல் இலாகாவில் நம்பிக்கை இல்லை என்ற எண்ணம் ஏற்படுகிறவர்களுக்குச் சட்டபூர்வமாக அப்பீல் செய்து கொண்டு தங்கள் குறைகளை நிவர்த்தி செய்து கொள்ளலாம் என்ற முறையிலும் இரண்டு வகையாக ஒன்றுக்கொன்று சம்பந்தமில்லாத முறையில் அமைந்திருப்பதுதான் இந்த மசோதாவின் மிகச் சிறந்த அம்சம் என்பதை நான் இந்தச் சபையின் கவனத்திற்குக் கொண்டு வரவிரும்புகிறேன். அதற்கும் அடுத்தபடியாக வரி விதித்ததற்குப் பிறகும்கூட அந்த வரியை வசூல் செய்யக்கூடிய நேரத்தில் வியாபாரிகளுக்கோ அல்லது பொதுமக்களுக்கோ எந்தவித சங்கடமும் இல்லாத முறையில் வரி வசூல் செய்வதற்கு தவணைகள் முதற்கொண்டு கொடுக்கலாம் என்ற முறையில் அமைந்திருப்பது இன்னும் சிறந்த அம்சமாகும். தவறி குற்றம் ஏற்பட்டாலும் அதற்காகக் கூண்டில் நிற்கும்போதுகூட அதையும் "கம்பவுண்ட்" செய்து கொள்ளலாம் என்ற முறையில் இன்னொரு அம்சம் இருப்பதைப் பார்க்கிறபோது இச்சட்டத்திலுள்ள சிறந்த அம்சங்கள் நன்கு விளங்கும். ஆகவே, இப்படிப்பட்ட சிறப்பானதொரு சட்டத்தை ஏற்படுத்துகிற காலத்தில் அதற்குப் பொறுப்பாளிகளாக இருந்தவர்களை நாம் பாராட்டாமல் இருக்க முடியாது. முதன்முதலாக டாக்டர் லோகநாதன் அவர்களுக்கு இந்தச் சபையின் நன்றியும் பாராட்டுதல்களும் உரித்தாகவேண்டும். அதை இச்சபை ஒத்துக் கொள்ளும் என்பதில் எந்த விதமான சந்தேகமும் எனக்கில்லை. அடுத்தபடியாக, இத்துறையில் ஈடுபட்டிருக்கும் உத்தியோகஸ்தர்களுக்கும் சரி, அதிலும் சிறப்பாக இந்த இலாகா அமைச்சர் அவர்கள், இதில் இவ்வளவு தூரம் பரிவு காட்டி, அக்கறை காட்டி, நல்ல வருவாய் கிடைக்கும் சட்டமாக இது இருப்பதால் இதை நல்ல முறையில் அமைக்கவேண்டுமென்ற நோக்கத்தோடு நல்ல மனப்பான்மையோடு இச்சட்டத்தை அனுகியதற்காக அவர்களையும் நாம் பாராட்ட கடமைப்பட்டுள்ளோம்.

12 50 p.m. அதே சமயத்தில் ஒன்றிரண்டு முக்கியமான கருத்துக்களை அரசாங்கத்தின் கவனத்திற்குக் கொண்டுவர விரும்புகிறேன். அதாவது வியாபாரிகளுக்கு வரிகளை நிர்ணயிக்கும் அதிகாரிகளை நியமிக்கின்ற விஷயத்தில் 12-வது செக்ஷனில் "to the best of its judgement" என்று கொடுத்திருக்கிறோம். இதற்குத் தகுந்த முறையில் நடந்து கொள்ளுகின்ற அதிகாரிகளை நியமிக்க வேண்டுமென்று டாக்டர் லோகநாதன் அவர்கள் அறிக்கையிலும் குறிப்பிட்டிருக்கிறார்கள். இதன் அடிப்படையில் ஏற்கனவே இருக்கின்ற அனுபவத்தைக் கொண்டு இந்தச் அதிகாரிகளை நியமிக்க வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். அதோடு இந்த சட்டம் ஏப்ரல் முதல் தேதியிலிருந்து கொண்டு வரப்பட வேண்டும் என்று சொல்லுகின்ற நேரத்தில், இது அமுல் செய்யப்படுகின்ற நேரத்தில் எல்லோருக்கும் guides to assessment தயாராக இருக்கின்ற முறையில் ஏற்பாடுகளை செய்ய வேண்டும் என்று அரசாங்கத்தைக் கேட்டுக் கொள்கிறேன்.

(Mr. Speaker in the Chair.)

அடுத்தபடியாக இது நேரடியாக பணத்தில் புழங்குகிற காரியத்தில் ஈடுபடுத்துகிற ஒரு சட்டத்தை நாம் செய்திருக்கிற இந்த நேரத்தில், இதில் ஈடுபடும் அதிகாரிகள் சிறந்த பண்புள்ளவர்களாகவும், நல்ல மனம் படைத்தவர்களுமாக இருக்க வேண்டும். இன்னொரு முக்கியமான கருத்தை டாக்டர் லோகநாதன் அவர்கள் குறிப்பிட்டிருக்கிறார்கள். அதாவது நடைமுறையில் இது வந்த பிறகு வருமானத்தை அதிகமாகக் கொடுக்கும் என்று இருந்தாலும்கூட எதற்கெல்லாம் வரிவிலக்கு கொடுக்கலாம் என்பதை பார்த்து அதற்கெல்லாம் விலக்கு கொடுக்கலாம் என்றும். உணவுப் பொருள்களுக்கு வரி விலக்கு அளிக்கவேண்டும் என்றும், காம்பௌண்டு வரி முறையை 50 ஆயிரம் ரூபாய் வரைக்கும் வைத்துக்கொள்ளலாம்

என்று குறிப்பிட்டிருக்கிறார்கள். இதை அரசாங்கம் இனிமேல் பரிசீலித்து நடைமுறையில் வரும்போது இதைக் கொண்டு வரலாம் என்று தோன்றும்போது கொண்டு வரவேண்டும் என்று கேட்டுக்கொண்டு, மீண்டும் இந்தச் சிறந்த சட்டத்தை இயற்றுவதற்குக் காரணமாயிருந்த டாக்டர் லோகநாதன் அவர்களையும் அமைச்சர் அவர்களையும் பாராட்டிக்கொண்டு என் உரையை முடித்துக்கொள்கிறேன்.

MR. SPEAKER : I would like to know from the Hon. Minister how much time he requires for his reply so that I may adjust the time-limit for other Members.

THE HON. SRI R. VENKATARAMAN : Twenty minutes, Sir.

SRI. T. S. RAMASWAMY PILLAI : ஸார், எனக்கு முன்னால் பேசிய பல அங்கத்தினர்களும் குறிப்பிட்டது போல் இந்த மசோதா விற்பனை வரி சட்டங்களில் பல வருஷங்களாக பலவிதமான திருத்தங்களும் வளர்ந்து கொண்டிருந்த நிலைமையில் மிகவும் குழப்பமான ஒரு மசோதாவாக இருந்தது. இந்த நிலைமையில் இதை நன்கு ஆராய்ந்து பார்த்து இந்த மசோதா இப்போது கொண்டு வரப்பட்டிருக்கிறது. இதைப்பற்றி நன்கு விசாரித்த டாக்டர் லோகநாதன் அவர்கள் செய்த சிபார்சுகளில் பலவற்றையும் அரசாங்கம் ஏற்றுக்கொண்டிருக்கிறது. அது மட்டுமல்ல இந்த மசோதாவைப் பொறுக்கு கமிட்டியும் சாங்கோபாங்கமாக பரிசீலனை செய்து, பல சமூகத்தினரிடமிருந்தும், பல பகுதியினரிடமிருந்தும் தகவல்களை அறிந்து அதற்கேற்ற முறையில் திருத்தங்களைச் செய்து இந்த மசோதாவைக் கொண்டு வந்தார்கள். இருந்த போதிலும் இதில் எல்லாப் பகுதியினருடைய குறைகள் எல்லாம் நீக்கப்படவில்லை என்பதை பொறுக்குக் கமிட்டியினரும் அதே போல் சட்டசபை அங்கத்தினர்களும் அறிவார்கள். இந்த மசோதா சாங்கோபாங்கமாக விவாதிக்கப்பட்டது என்பதை எல்லோரும் அறிவார்கள். அதே நேரத்தில் அரசாங்கத்தைப் பொறுத்த அளவில் அரசாங்கத்தின் கொள்கையாக இந்த மசோதாவை வைத்துக்கொண்டு இருக்கப் போவதில்லை என்று அமைச்சர் அவர்கள் குறிப்பிட்டார்கள். எங்களைப் பொறுத்த அளவில் நம்முடைய தேசிய அபிவிருத்தித் திட்டங்கள் நிறைவேற்றுகிற அளவில் இது அரசாங்கத்தின் கொள்கையின் அடிப்படையிலே இதை அமைத்திருக்க வேண்டும் என்பதுதான் எங்களுடைய கருத்து. அந்த விதத்தில்தான் நாட்டினுடைய முன்னேற்றத்திற்கான வழியில் வரிவிதிப்பு சட்டங்கள் எல்லாம் அமைந்திருக்க வேண்டும் என்பதை யாரும் மறுக்க முடியாது. இன்றைய தினம் ஏழை பாமர ஜனங்களின் வாழ்க்கைச் செலவு எல்லாம் 50 சதமானம், 60 சதமானம் என்று உயர்ந்து கொண்டே போகின்ற இந்த நேரத்தில் உணவு தான்யங்களுக்கு வரிவிதிக்கக் கூடாது என்பதை எல்லோரும் ஒப்புக்கொள்வார்கள். டாக்டர் லோகநாதன் அவர்களும் இதற்கு குறைந்த அளவில்தான் வரி போட வேண்டும் என்று குறிப்பிட்டிருக்கிறார்கள். ஆனால் அவர்கள் குறிப்பிட்டிருக்கும் விகிதத்திலிருந்து இரண்டு மடங்கு அதிகமாக, இந்த அரசாங்கம், அல்லது இந்த அரசாங்கத்திற்கு பொறுப்பாளியாக இருக்கின்ற அமைச்சர்கள் வரியை விதித்திருக்கிறார்கள். பொதுவாக இதன் மேல் இருக்கின்ற வரியை எடுத்துவிட வேண்டும் என்பதை யாரும் மறுக்க மாட்டார்கள். இன்றைக்கு நமக்கு முக்கியமாக, இன்றியமையாததாக இருக்கின்ற உணவுப் பொருட்கள், விறகு, காய்கறிகள், கிரோஸின் ஆயில் போன்றவைகளுக்கு வரிவிலக்கு கொடுக்க வேண்டும் என்பதை நாம் இங்கு எடுத்துச் சொன்னோம். ஆனால் இவற்றின் மேல் இப்போது போடப்பட்டிருக்கும் வரியைக் குறைப்பதற்கும் கூட்டுவதற்கும் ஷெட்யூலில் சேர்ப்பதற்கும் 59-வது பிரிவின் கீழ், அதிகாரத்தை அரசாங்கம் எடுத்துக்கொண்டிருக்கிறது. இத்தகைய அதிகாரத்தை வைத்துக்கொண்டு நமது நாட்டில் ஒரு சோஸலிஸ சமுதாயத்தை அமைக்க விரும்பும் சர்க்காரின் நடைமுறையில் இந்தச் சட்டத்தை அமுல் நடத்தும்போது இதனால் சமூகத்திலுள்ள ஏழை மக்களுக்கு ஏற்படும் கஷ்டங்களை உணர்ந்து விதிவிலக்கு

[Sri T. S. Ramaswamy Pillai] [14th February 1959

கொடுப்பார்கள் என்று நம்புகிறேன். சோஷியலிஸ சமுதாயம் அமைக்க வேண்டும் என்கிற லட்சியத்தை ஏற்றுக்கொண்டிருக்கிற நேரத்தில் சமூகத்தில் அடித்தளத்தில் இருக்கும் ஜனங்கள் மீது வரிப்பாரத்தை அதிகமாக சுமத்தமாட்டார்கள் என்று நம்புகிறேன். அதே நேரத்தில் இதில் இருக்கின்ற குறைகளை எல்லாம் நீக்குவதற்கும் நல்ல முறையில் நடைபெறச் செய்வதற்கும் வேண்டி நல்ல அதிகாரிகளை அங்கங்கே நியமிப்பார்கள் என்ற நம்பிக்கையோடு என் பேச்சை முடித்துக் கொள்கிறேன்.

MR. SPEAKER : கனம் அமைச்சர் அவர்கள் 1-10-க்கு பேசுவார். அதற்கு முன்னால் பல அங்கத்தினர்கள் பேசவேண்டும் என்று சொல்லுகிறார்கள். இத்தனை பேர்களும் பேசுவதென்றால் நான்கு நிமிஷம் ஐந்து நிமிஷம்தான் பேச முடியும். ஆகவே இரண்டு மூன்று அங்கத்தினர்கள் பேசுவதாக இருந்தால் அவர்களுக்கு கூடுதலாக நேரத்தை ஒதுக்க முடியும். அதற்குத் தகுந்த முறையில் அங்கத்தினர்கள் பேசவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். அடுத்தபடியாக கனம் லட்சுமிகாந்தம் அவர்கள் பேசுவார்கள்.

SRIMATHI LAKSHMIKANTHAMMAL : சட்டமன்றத் தலைவர் அவர்களே, இந்த விற்பனை வரிச்சட்டத்தை நிறைவேற்றியிருக்கின்ற இந்த நேரத்தில் ஒன்றிரண்டு வார்த்தைகளை சொல்ல விரும்புகிறேன். இந்த விற்பனை வரிச் சட்டமானது கனம் ராஜாஜி அவர்கள் இருக்கின்ற காலத்திலேயே கொண்டு வரப்பட்டது. அப்போது இது புதிய சட்டமாகத் தோன்றியது. அப்போது வியாபாரிகளிடத்தில் இதற்கு அதிகமாக எதிர்ப்பு இருந்து வந்தது. ஆனால் நம்முடைய நாட்டினுடைய முன்னேற்றத்திற்காக இந்த மாதிரியான வரிபோட வேண்டியது அவசியம் என்பதை நாளாவட்டத்தில் எல்லோரும் உணர்ந்து கொண்டு வருகிறார்கள். மற்ற மாகாணங்களை விட எல்லாம் விற்பனை வரிச் சட்டமானது நம் மாகாணத்தில் கொண்டு வரப்பட்டு நல்ல முறையில் வரிகளை வசூலிப்பதற்கு தகுந்த முறையை கொண்டு வருவதில் நம் மாகாணம் முன்னோடியாக இருக்கின்றது. இதன் மூலமாக நமது சென்னை ராஜ்யம் சிறப்புப் பெற்று வருகிறது. இதை நாம் நன்கு பரிசீலித்துப் பார்ப்போமானால் இதைப்பற்றி ஒரு சில மாதங்களுக்கு முன்னால் டாக்டர் லோகநாதன் அவர்களும் பொறுக்குக் குழு கமிட்டியினரும் சேர்ந்து நன்கு பரிசீலித்திருக்கிறார்கள். அதன் பிறகுதான் இந்தச் சட்டம் அமைக்கப்பட்டிருக்கிறது. இந்தச் சட்டத்தில் அமைச்சர் அவர்கள் ஏழை மக்களுக்கு கஷ்டங்களை கொடுக்க வேண்டுமென்ற நோக்கத்தோடு உணவு பொருட்களுக்கு வரி விதிக்கவில்லை. நம்முடைய நாட்டின் முன்னேற்றத்திற்கு பல கோடிக் கணக்கில் ரூபாய் தேவைப்படுகின்றது. நாட்டின் முன்னேற்றம் என்று சொல்லும்போது நாட்டு மக்களுடைய முன்னேற்றம் என்று நாம் கருத வேண்டும். அதில் பணக்காரர்கள் என்றோ ஏழைகள் என்றோ வித்தியாசம் கிடையாது. நாட்டிலுள்ள ஒவ்வொருவருக்கும் நம்முடைய தேசத்தின் முன்னேற்றத்தில் அக்கறை இருக்க வேண்டும். இந்த நாட்டின் முன்னேற்றம் இந்த நாட்டிலுள்ள எல்லா மக்களுடைய முன்னேற்றம் என்பதைக் கருதித்தான் எல்லா உணவுப் பொருட்களின் மீதும் வரி போடப்பட்டிருக்கிறதே தவிர ஏழைகளை வாட்டி வதைக்க வேண்டும் என்ற நோக்கத்தினால் போடப்பட்ட சட்டமல்ல. நாம் சோஷியலிஸ சமுதாயத்தை நோக்கிப் போய்க்கொண்டிருக்கிறோம். அந்த சமயத்தில் இந்த நாட்டிலுள்ள எல்லா மக்களும் ஒன்று சேர்ந்து கொஞ்சம் கஷ்டப்பட்டாலும் ஒத்துழைக்க வேண்டும் என்பதைத்தான் இந்த சட்டம் நமக்கு எடுத்துக் காட்டுகின்றது. அதல்லாமல் தொழிலாளர்களின் மீது இந்த அரசாங்கத்திற்கு அக்கறை கிடையாது, தொழிலாளர்களிடமிருந்தும் ஏழை மக்களிடமிருந்தும் வரிகளை வாங்குவதற்குத்தான் இந்தச் சட்டம் கொண்டு வரப்பட்டிருக்கிறது என்று எதிர் கட்சியினர் சொல்லுவார்களானால் அதை யாரும் நம்ப மாட்டார்கள். இந்த விற்பனை வரிச் சட்டம் மூலம் இப்போது விற்பனை வரி உணவுப்பொருட்களின் மீது போடப்பட்டிருந்தாலும் காலம் போகப் போக இதில் எந்த முறையில் வருமானம் வருகிறது என்பதை பார்த்துவிட்டு, இவைகளுக்கு விதிவிலக்கு கொடுக்கலாம் என்று தோன்றும் போது அவைகளுக்கு விலக்கு கொடுப்பதற்கு அரசாங்கத்திற்கு அதிகாரம்

14th February 1959] [Srimathi Lakshmikanthammal]

இருக்கிறது. அதை வைத்துக்கொண்டு உணவுப்பொருட்களுக்கு இந்த வரிவிதிப்பிலிருந்து விலக்கு அளிப்பதற்கு சர்க்கார் முயற்சி எடுத்துக் கொள்ளும் என்று நான் நம்புகிறேன். இம்மாதிரியான வரிகள் எல்லாம் போடப்பட்டிருப்பதால் வியாபாரிகள் குமுறிக் கொண்டிருப்பார்கள் என்று சொல்லப்பட்டது. அவ்விதம் வியாபாரிகள் இருக்கிறார்கள் என்று சொல்ல முடியாது. வியாபாரிகள் எல்லாம் வரிகளை சர்க்காருக்குக் கொடுப்பதற்குத் தயாராகத்தான் இருந்து கொண்டிருக்கிறார்கள். அவர்களுக்கு அதிகாரிகளுடைய தொல்லைகள் இல்லாமல் இருந்தால் நிச்சயமாக அவர்கள் ஒழுங்காக வரியைச் செலுத்துவார்கள் என்பதைத் தெரிவித்துக்கொள்கிறேண். ஆகவே இதைக் கொண்டு வரும்போது ஒழுங்கான முறையில் நடைபெறுவதற்கு வேண்டிய விதத்தில் ஏற்பாடுகளைச் செய்ய வேண்டும் என்று அமைச்சர் அவர்களைக் கேட்டுக் கொண்டு முடித்துக் கொள்கிறேன்.

*SRI M. P. SUBRAMANIAM: அவைத் தலைவர்அவர்களே, இந்த விற்பனை வரி மசோதாவானது சட்டமாகும் தருவாயில் இருக்கிறது. 1 00 p.m. கடந்த மூன்று அல்லது நான்கு நாட்களாக நாமெல்லாம் விவாதித்து, இப்போது இறுதியிலே சட்டமாக விருக்கிறது. இந்தச் சட்டத்திலே மிக முக்கியமாக நாம் காண்கிற நல்ல பலன் என்னவென்றால் இந்த விற்பனை வரியானது பல சந்தர்ப்பங்களிலே இந்தச் சபையிலே விவாதத்திற்கு எடுத்துக் கொள்ளப்பட்ட போதிலும், சட்டம் முழுவதையும் பரிசீலிப்பதற்கு ஒரு வாய்ப்பை அளித்தது என்பதை நம்மால் புரிந்துகொள்ள முடிகிறது. கடந்த 20 ஆண்டுகளாக இருந்து வந்த சட்டத்தை எடுத்து, அதிலுள்ள சங்கடங்களை நிவர்த்திக்கும் முறையில் ஒரு முழுச் சட்டமாக ஆக்குவதிலே உள்ள கஷ்டங்களை, பொறுக்குக் குழுவில் நான் இருந்த காரணத்தினால், என்னால் உணர முடிகிறது. பல சந்தர்ப்பங்களிலே அமைச்சர் அவர்களுக்கும், இந்தத் துறையைச் சார்ந்த அதிகாரிகளுக்கும, சில கருத்துக்களை மாற்றிக் கொள்வதில் அவர்களுக்கும் கஷ்டங்கள் இருக்கின்றன என்பதை நம்மால் உணர முடிகிறது. இவ்வளவு கஷ்டப்பட்டும், புதிய சட்டத்தைக் கொண்டு வரும்போது பலர் விரும்பியதற்கிணங்க பல நன்மைகள் ஏற்படவில்லை என்பதிலே என்னைப் போன்றவர்களுக்கு வருத்தம் இருக்கத்தான் செய்கிறது. இதற்காக அமைச்சர் அவர்களுக்கு உள் நோக்கம் கற்பிக்க விரும்பவில்லை. இதில் வரக்கூடிய வருமானம் குறையக்கூடாது என்பதுதான் அவருக்குள்ள கவலை, ஆகவே இத்தகைய வருமானத்தின்—குறிப்பாக இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்திற்குப் பணம் வேண்டுமென்று சொல்லும் நேரத்தில்—குறைவு ஏற்பட்டால், திட்டங்களுக்குப் பாதகம் ஏற்படும் என்ற காரணத்தினால் அமைச்சர் அவர்கள் பல நல்ல திருத்தங்களை ஒப்புக் கொள்ளவில்லை என்பதை நான் ஒப்புக்கொள்ளுகிறேன். டாக்டர் லோகநாதன் அவர்களை நியமித்து இந்தச் சட்டத்தைத் திருத்துவதற்கு முக்கிய காரணம் பல்லாண்டுகளாக வியாபாரிகள் இந்தச் சட்டத்தால்—அதிலும் குறிப்பாக சிறு வியாபாரிகள்—பாதிக்கப்படுகிறார்கள், அவர்களுக்குச் சாதகம் ஏற்படவேண்டுமென்பதுதான் முக்கிய நோக்கம் என்று நினைக்கிறேன். எந்த அளவுக்குச் சிறு வியாபாரிகளுக்கு நன்மை கிடைத்தது என்று என்னால் தெளிவாகப் புரிந்து கொள்ள முடியவில்லை.

மற்றும் ஒன்று, இந்தச் சட்டத்தால் வியாபாரிகளுக்குத் தொல்லைகள் இருக்கின்றன என்பதைப் பல சந்தர்ப்பங்களில் சுட்டிக் காட்டியிருக்கிறோம். அமைச்சர் அவர்கள் ஒரு முறை சொன்னார்கள், கடந்த ஒரு ஆண்டுக்குள் தொல்லைகள் குறைந்திருக்கிறது என்று. இனி போகப் போகத்தான் சொல்ல முடியுமே தவிர இப்போது தவிர்க்கப்பட்டு விட்டது என்றோ, அல்லது தவிர்க்கப்படுமென்றோ சொல்லி விட முடியாது. பல சந்தர்ப்பங்களில் டாக்டர் லோகநாதன் அவர்கள் சொல்லியிருப்பது அவருக்குச் சாதகமானதாக இருந்தால் டாக்டர் லோகநாதன் அவர்களை மேற்கோளாகக் காட்டிப் பயன்படுத்திக் கொண்டார் அமைச்சர் அவர்கள். அதே நேரத்தில் நாங்கள் திருத்தத்திற்கு ஆதாரமாக டாக்டர் லோகநாதன் அவர்களை மேற்கோள் காட்டியபோது அவர் ஒத்துக் கொள்ளவில்லை. அவருடைய பெரும்பாலான

ஆலோசனைகளை ஏற்றுக் கொண்டிருக்கிறோம் என்று தான் அமைச்சர் அவர்கள் சொன்னார்கள். இது அதில் அடங்கி இருக்கிறது என்பதை ஒப்புக்கொள்கிறேன்.

கடைசியாக, இந்தப் பக்கத்தில் உள்ள கனம் அங்கத்தினர் டி. எஸ். ராமசுவாமிப் பிள்ளை கூறியது போல, இந்தச் சட்டம் வருவாய்க்கு உரிய சட்டமாக இருந்தாலும் சமூக நோக்கங்களை இதன் மூலம் சிலர் நன்மைகளை அடையும்படிச் செய்வதில் தவறில்லை என்பதைச் சுட்டிக் காட்ட விரும்புகிறேன். பொறுக்குக் குழுவிலேயும், இங்கேயும் எடுத்துக் காட்டியதுபோல கூட்டுறவுச் சங்கங்களுக்குப் பல சலுகைகள் கொடுக்கவேண்டுமென்று வற்புறுத்திய நேரத்தில், தனிப்பட்ட நபர்களுக்கும் கூட்டுறவு சங்கங்களுக்கும் பாகுபாடு செய்வது என்பது சட்ட அடிப்படையிலே தவறு என்று சொன்னார்கள். தவறாகத் தோன்றலாம். இருந்தாலும் கூட்டுறவு முறைதான் எல்லா காரியங்களுக்கும் பயன்படுத்த வேண்டும் என்று சொல்லுகின்ற நேரத்தில், இந்தக் கூட்டுறவுச் சங்கம்தான் எல்லாத் துறையிலும் மிக உயர்ந்தது, வரவேற்கத் தகுந்தது என்ற அடிப்படைக் கொள்கையை எல்லோரும் ஒப்புக்கொண்டிருப்பதால் இந்தச் சலுகையைக் கொடுப்பதில் தவறில்லை. இப்போது பல விதத்தில் கைத்தறிக்கும் கதருக்கும் அதிகச் சலுகை கொடுக்கிறோம். மில்லுக்கும் இதற்கும் பாகுபாடு இருக்கிறது என்ற காரணத்தில் இதைத் தவிர்க்கவேண்டுமென்று கூற முடியாது. ஆகையால் அந்த நோக்கத்தில் கூட்டுறவுச் சங்கங்களுக்கும் விதி விலக்குக் கொடுத்தால் நலமாக இருக்கும்.

இறுதியாகச் சொல்லுகிற நேரத்தில், இந்தச் சட்டம் ஏழைகளைப் பாதிக்கிற சட்டம் என்று கூறிக்கொள்ள விரும்புகிறேன். இந்த வரி மறைமுகவரியாக இருக்கின்ற காரணத்தால் இது பொது மக்களைச் சமமாகப் பாதிக்கிறது என்று சொன்னாலும், ஏழைகளுக்குத்தான் இதனால் வரி பளு அதிகமாக இருக்கிறது என்று நம்மால் உணர முடிகிறது. இந்த வரியினால் வியாபாரிகள் இடையிலே தொல்லைப்படுவார்கள் என்று சொன்னாலும் கூட, சாதாரணப் பொது மக்கள் வரிச் சுமையைத் தாங்குகிறவர்கள் பெரும் கஷ்டப்படுவார்கள் என்பதை மனதிலே வைத்துக் கொள்ள வேண்டும். அங்கத்தினர்களால் பல திருத்தங்கள் கொடுக்கப்பட்டும் ஒன்றுகூட ஏற்றுக்கொள்ளப்படவில்லை. அங்கத்தினர்களால் 200-க்கும் அதிகமான திருத்தங்கள் கொடுக்கப்பட்டன. அதிலே இரண்டொரு வெர்பல் திருத்தங்களைத்தான் ஒப்புக்கொண்டார்கள். பொருக்குக் குழுவிலே பல சலுகைகளை கேட்டபொழுது சட்ட சபையில் பரிசீலிக்கலாம் என்று சொன்ன நேரத்தில் நாங்களெல்லாம் மன மகிழ்ச்சியோடிருந்தோம். அவைகளெல்லாம் இங்கேயும் கவனிக்கப்படவில்லை. மீண்டும் அடுத்த ஆண்டு பரிசீலனை செய்யக்கூடிய நேரத்தில் பரிசீலனை செய்து, பட்ஜெட் வரும்போதுதான் இதைப் பற்றிப் பேசலாம் என்று இருப்பதை விட்டு, இது எப்படி நடக்கிறது என்பதைக் கவனிக்க ஒரு குழு அமைப்பதாக ஒரு உத்திரவாதம் அளித்தால் நல்லது என்று வேண்டிக்கொள்கிறேன்.

**SRI S. NAGARAJA MONIGAR:** கனம் சபாநாயகர் அவர்களே, நம் நாடு ஒரு விவசாய நாடு. அதற்கடுத்தாற்போல் வியாபாரிகளைக் கொண்டிருக்கிறோம். வியாபாரிகளை இந்தச் சட்டம் பாதிக்கிறது என்று சொல்லுகிறபோதிலும், இது பெருவாரியாக பொருளை உபயோகிக்கிற மக்களையும் பாதிக்கிறது. ஆகவே, இதற்கு வேண்டிய அவகாசம் எடுத்துக்கொண்டு, ஒரு நிபுணரைப் போட்டு, சென்ற ஒரு வருஷ காலமாகச் சிந்தனை செய்து 20 வருஷங்களுக்கு முன்பு போட்ட வரியாதலால் நமக்கு இதிலே பல அனுபவங்கள் உண்டு—அதையெல்லாம் கவனித்து அரசாங்கம் இதை உருவாக்கி, சட்ட சபையில் பாஸ் செய்வதற்கு ஏதுவாகச் செய்வதற்கு அமைச்சர் அவர்களை முதலில் பாராட்டுகிறேன்.

இதிலே மிகவும் கவனம் செலுத்தவேண்டியது அவசியமே. இதிலே இரண்டு விதக் குறைகள் சொல்லப்பட்டன. ஒன்று வியாபாரிகள் இதிலிருந்து தப்பித்துக்கொள்ள பொய்க் கணக்கு முதலியன எழுதி அரசாங்கத்தை ஏமாற்றப் பார்க்கிறார்கள் என்பது அரிச்சந்திரன் போல் இருந்து வியாபராம் செய்வது முடியாது, வியாபராம் என்றாலே எவ்வளவு

14th February 1959] [Sri S. Nagaraja Monigar]

லாபம் சம்பாதிக்க முடியுமோ அவ்வளவு சம்பாதிப்பதுதான் என்ற கொள்கை இருக்கிறது. கணக்கிலே தப்பித்துக் கொள்வதிலே சர்க்காரையும், அதிகாரிகளையும் குற்றம் சாட்டுகிறார்கள். இவர்கள் சொல்லுகிறார்கள் பொது மக்கள் சொல்லுகிறார்கள் வியாபாரிகள் சரியானபடி கணக்கு வைத்து வரி கொடுத்தால் வேண்டிய பணம் கிடைக்கும், ஆனால் அதிகாரிகளால் சரியானபடி வசூல் செய்யப்படுவதில்லை, அதிகாரிகள் சரியானபடி நடவடிக்கைகள் எடுப்பதில்லை, கொடுக்கிறவர்கள் லஞ்சம் கொடுக்கிறார்கள். வாங்குகிறவர்கள் வாங்குகிறார்கள், ஆகையால் கிடைக்க வேண்டிய பணம் கிடைக்காது போகிறது என்று இப்படி இரண்டு கட்சியிலும் சொல்லுகிறார்கள். பாமர மக்களாக உள்ளவர்களுக்கு, நல்ல படிப்பு இல்லாதவர்களுக்கு, சிறு வியாபாரிகளுக்குச் சலுகைகளைச் செய்திருக்கிறார்கள். 5,000 ரூபாய் என்று இருந்ததை இப்போது 10,000 ரூபாயாக உயர்த்தியிருக்கிறார்கள். இங்கே 25,000 ரூபாய், 30,000 ரூபாய் என்று கூடப் போடச் சொன்னோம். அதற்கு அமைச்சர் அவர்கள் சொன்ன பதில், சிறிய வியாபாரிகள் வியாபாரத்தை இரண்டாகப் பிரித்து விட்டு வரியை ஏமாற்றி விடுவார்கள் என்று சொன்னது பொருத்தமாக இருக்கிறது. சிறு வியாபாரிகளுக்கு விலக்கு அளித்திருந்தாலும், பெரிய வியாபாரிகளைப் பொருத்த மட்டில் கண்டிப்பாக நடவடிக்கை எடுத்து, இத்தனை பெரிய ஊழியர்களை லஞ்ச ஊழல்களுக்காகத் தண்டித்தோம், இத்தனை பெரிய வியாபாரிகளைச் சிறைக்கு அனுப்பினோம் என்கிற முறையில் இந்தச் சட்டத்தை அமுல் நடத்தினால் அன்றி இந்தக் கிளர்ச்சியும், இந்த எதிர்ப்பும் நாட்டிலே இருக்கிற அரசாங்கத்திற்கு ஹானி உண்டுபண்ணலாம் என்று சொல்லி, நான் சர்க்காரைப் பாராட்டி முடித்துக்கொள்கிறேன்.

* THE HON SRI R. VENKATARAMAN : கனம் சபாநாயகர் அவர்களே, இரண்டு ஆண்டுகாலமாக இந்த விற்பனை வரி விஷயம் நன்றாக ஆலோசிக்கப்பட்டது என்பதைக் கனம் அங்கத்தினர்கள் எல்லோரும் அறிவார்கள். 1959–வது சட்டத்திலே பல்வேறு திருத்தங்கள் செய்து, அந்தப் புத்தகத்தை எடுத்தால் ஒரு ஆலமரம்போல் இருந்தது என்று சொன்னேன். விழுதுகள் தொங்கிக் கொண்டிருப்பதை போல திருத்தங்கள் ஒட்டப்பட்டிருந்தது இன்றைக்கு அழகான ஒரு பூச்செடியாக உங்கள் முன்னால் தோற்றமளிக்கிறது என்று சொல்ல விரும்புகிறேன்.

இந்தச் சட்டத்திலே செய்யப்பட்டிருக்கும் மாறுதல்கள் எல்லாம் கனம் லாஸர் அவர்கள் தெளிவாக ஒவ்வொன்றாக எடுத்துக் கூறிவிட்டார்கள். அதனால் மீண்டும் அவைகளைத் திருப்பிச் சொல்வதற்கு அவசியம் இல்லை. ஓரிரண்டு விஷயங்களை நான் கவனத்திற்குக் கொண்டுவர விரும்புகின்றேன்.

இந்தச் சட்டம் வியாபாரிகளுக்குக் கஷ்டம் இல்லாத முறையில் அமைக்கவேண்டும் என்ற நோக்கத்துடன்தான் செய்யப்பட்டிருக்கிறது. அந்த அளவுக்கு இது வெற்றியடைந்திருக்கிறது என்பதை நான் மிகத் தாழ்மையுடன் தெரிவித்துக்கொள்கிறேன்.

அரை சத விகிதம், ஒரு சத விகிதம் என்று வரி விதிப்பதன் காரணமாக, பொது மக்களுக்கு டாக்டர் லோகநாதன் சொன்ன சிபார்சின் அடிப்படையிலே நன்மை ஏற்பட்டாலும், ஏற்படாவிட்டாலும், வியாபாரிகளைப் பொறுத்தமட்டில், அவர்களுக்கு எந்த விதமான தொல்லைகளும் இல்லை. அவர்கள் என்ன விரும்பினார்களோ, அவையெல்லாம் இந்தச் சட்டத்திலே செய்யப்பட்டிருக்கிறது என்பதை நான் சொல்லிக்கொள்ள விரும்புகிறேன்.

சிறு வியாபாரிகளுக்கு நாம் இன்றைக்கு அவர்கள் கம்பவுண்டு செய்து கொடுக்கவேண்டிய நிலைமையை அனுமதித்திருக்கிறோம். கணக்குகள் வைத்துக்கொள்ளவேண்டிய தொல்லை பெரிய அளவு குறைந்துவிடும் என்று இதற்குமுன் நான் எடுத்துக்காட்டினேன். இன்றைக்கிருக்கும் வரி விதிப்பு நிலைமையிலே, நிர்ணயமாக நிச்சயமாக இவ்வளவு வியாபாரம் ஒவ்வொருவரும் செய்திருக்கிறார்கள் என்று கண்டுபிடிக்கவேண்டிய அவசியம் இருக்கிறது. ஏனென்றால், ரூபாய் 15,500 ஆக இருந்தால் ஒரு

[Sri R. Venkataraman] [14th February 1959

வரியும், ரூபாய் 15,502 ஆக இருந்தால் சர்க்காருக்கு இன்னும் நான்கு நயே பைசே கூடி வரக்கூடிய நிலைமையும் இருப்பதால், ஒவ்வொருவருடைய கணக்கையும் நிச்சயமாகப் பரிசீலனை செய்து, எவ்வளவு வியாபாரம் செய்திருக்கிறார்கள் என்று கண்டுபிடிக்கவேண்டிய அவசியம் இருக்கிறது. அதனால்தான் அவர்கள் வியாபாரிகளைக் கணக்கைக் கொண்டுவரும்படிச் சொல்லி, பரிசீலனை செய்து, கொஞ்சம் அவர்களுக்குச் கஷ்டங்களெல்லாம் கொடுக்கக்கூடிய நிலைமை இன்றைக்கு இருக்கிறது.

ஆனால், வரப்போகிற சட்டத்திலே, 10 ஆயிரம் ரூபாயிலிருந்து 15 ஆயிரம் ரூபாய் வரையிலும் அவர்களுக்கு எந்த விதமான வியாபாரம் நடந்திருந்தாலும், இதில் சர்க்காருக்கு அக்கறை இல்லை அதைக் கணக்கிட்டு சரிபார்த்து, எவ்வளவுதான் நிர்ணயமாக, நிச்சயமாக வியாபாரம் செய்திருக்கிறார்கள் என்று கண்டு பிடிக்கவேண்டிய அவசியம் கிடையாது. அதுபோல் 25 ஆயிரம் ரூபாய் வரையிலும் அவர்கள் கம்பவுண்டு செய்து, வரி கொடுக்கக்கூடிய நிலைமை இருப்பதினால் 25 ஆயிரம் ரூபாய் வரைக்கும் இருக்கும் வியாபாரிகளுக்குத் தொல்லை பெரிய அளவு எடுபட்டுவிட்டது என்று சொல்லலாம்.

வரி விகிதத்தை எடுத்துக்கொண்டால்கூட, ஒரு சதமானம், பத்தாயிரம் ரூபாயிலிருந்து பதினைந்தாயிரம் ரூபாய் வரையில் இருக்கும். இருபத்தைந்தாயிரம் ரூபாய் வரையில் அரை சதமானமாக வரும். 24 ஆயிரம் ரூபாய் வியாபாரம் இருக்கிறதென்று வைத்துக்கொண்டால் ரூபாய் 480 வரி செலுத்தவேண்டும் வருஷத்திற்கு. நம்முடைய விதி பிரகாரம் ரூபாய் 240 கொடுத்தால் போதும். ஆகையால் இம்மாதிரி குறைவான வரி விகிதம் கூட அவர்களுக்குக் கிடைக்கிறது. அந்த விதத்திலும் அவர்களுக்கு ஓரளவு சலுகை கிடைத்திருக்கிறது.

கணக்கு வைக்கும் விஷயத்திலே, இன்றைக்கு நாம் இருபத்தையாயிரம் ரூபாய் வரையில் இருக்கிறவர்கள். பர்ச்சேஸ் பில் வைத்தால் போதும் என்ற திட்டத்தை கொண்டுவரப்போகிறோம் என்று செலக் கமிட்டி முன்னாலும் நன்றாக எடுத்துச் சொல்லியிருக்கிறோம். டாக்டர் லோகநாதன் அவர்கள் சொன்னதுபோல், இருபத்தையாயிரம் ரூபாயிலிருந்து ஐம்பதாயிரம் ரூபாய் வரையில்கூட அவர்களுக்கு கம்பவுண்டெட் டாக்ஸ் கொடுக்கவேண்டுமா என்பதை ஓரிரண்டு வருஷத்தில் பரிசீலனை செய்து பார்ப்போம் என்று சொல்லியிருக்கிறோம். சர்க்கார் நிச்சயமாகப் பரிசீலனை செய்து, இப்பொழுதிருக்கும் நடைமுறையிலே, வருகின்ற சட்டத்திலே எந்தச் சிக்கலும் ஏற்படாமல், வியாபாரிகளுக்கே அது நன்மையாக இருக்குமானால், அதையும் சர்க்கார் பரிசீலனை செய்வதற்குத் தயாராக இருக்கிறது என்பதையும் தெரிவித்துக்கொள்ள விரும்புகிறேன்.

அடுத்தப்படியாக, நாம் இன்றைக்குப் பெரிய மற்றொரு மாறுதல் செய்திருக்கிறோம். இதற்கு முன்னால், அப்பீல் கேட்கின்றவரும், அஸெஸ்மெண்ட் செய்கின்றவரும் ஒரே அதிகாரியாக இருந்தார். ஒரு கேஸிலே அஸெஸ்மெண்ட் போட்டவர் மற்றொரு கேஸிலே அப்பீல் கேட்பார். இவ்வித குழப்பமான நிலைமை இருந்ததனால் அப்பீல் கேட்கின்றவர்களிடம் அப்பீலைக் கேட்டு முடிவு செய்கின்ற மனப்பான்மை இல்லாமல் இருந்தது. அவர்கள் தங்களுக்கு அஸெஸ்மெண்டிலே இருக்கும் தொல்லை, தொந்தரவுகளை வைத்துக்கொண்டு கூட, அப்பீல் கேட்கும்போது, அவர் நிர்த்தாட்சண்யமாகவோ அலட்சியமாகவோ இருக்குக்கூடிய நிலைமை ஏற்பட்டிருக்கலாம். ஆனால், இப்பொழுது அஸெஸ்மெண்ட் கமிஷனர் என்று தனியாக வைத்து, அதற்குமேல் அப்பெல்லெட் ட்ரைப்யூனல் அப்பீலைக் கேட்பதன் காரணமாக, அப்பீல் கேட்கின்ற போது, காலதாமதம் ஆகாமலும், அப்பீல் எந்த முறையில் கேட்கப்படவேண்டுமோ அந்த முறையில் கேட்பதற்கும் வசதியாக அமைந்திருக்கிறது. இந்தப் பிரிவினை காரணமாக அனேக சிக்கல்கள் குறைந்துவிடும் என்பதில் சந்தேகம் இல்லை.

இன்னும் அங்கு வரி விதிப்பதிலே, எந்த எந்த பொருள் மீது என்ன வரி விதிக்கவேண்டும் என்பது பற்றிச் சர்க்கார் ஏதோ நிர்ணயம் செய்துகொண்டதாக கனம் அங்கத்தினர்கள் பேசினது சரியல்ல. டாக்டர்

14th February 1959] [Sri R. Venkataraman]

லோகனாதன் என்ன சிபார்சு சொன்னார்களோ, அந்தச் சிபார்சின் அடிப் படையிலேயே நாம் பெருவாரியாக எல்லாக் காரியங்களையும் செய்திருக்கிறோம். பண்டத்தைப்பற்றியும் அவர்கள் பரிசீலனை செய்தார்கள். 200 திருத்தங்கள் கொடுத்தோம். அவற்றையெல்லாம் ஏற்றுக்கொள்ளவில்லையென்று குறிப்பிடப்பட்டது. 200-க்கு மேல் ஆயிரம் ஆயிரம் திருத்தங்களெல்லாம் செலக்ட் கமிட்டியிலே பரிசீலனை செய்யப்பட்டு, அதில் எந்த எந்த முறையிலே எப்படி மாற்றியமைக்கவேண்டும் என்றெல்லாம் நன்றாக ஆலோசனைசெய்து, அவைகளெல்லாம் உருவாக்கி, இதில் வர்த்தகப் பிரதிநிதிகள், பொதுமக்கள் பிரதிநிதிகள், சேம்பர் ஆப் காமர்ஸ் பிரதிநிதிகள் இவர்களெல்லாம் சொன்னதைக் கேட்டுக்கொண்டு சட்டத்தை உருவாக்கியிருக்கிறோம். அப்படியிருக்க, சட்டசபையில் 200 திருத்தங்களுக்குமேல் கொண்டுவந்திருக்கிறார்களே என்பதற்காக அவற்றையெல்லாம் ஒத்துக் கொண்டிருந்தால், பாதகமாக முடிந்திருக்கும் என்று நான் சொல்ல முன்வருகிறேன். எவ்வளவு திருத்தங்கள் கொடுத்தார்கள், எவ்வளவு ஒத்துக்கொண்டார்கள் என்ற கணக்கு இல்லை. எந்த முறையிலே சட்டம் அமைக்கப்பட்டிருக்கிறது என்பதைத்தான் நாம் பார்க்கவேண்டும். சட்ட சபையில் கொடுத்த திருத்தங்களையெல்லாம் நாம் ஏற்றுக்கொண்டுவிடுவது என்ற நிலைமை இருக்கவேண்டுமானால், செலக்ட் கமிட்டிக்கே போக வேண்டியதில்லையே. அங்கே ஒன்றும் ஒத்துக்கொள்ளாமலிருந்திருக்கலாமே.

* **Sri A. GOVINDASAMY** : கனம் சபாநாயகர் அவர்களே, செலக்ட் கமிட்டியிலே ஒத்துக்கொண்ட விஷயங்களை அப்படியே ஏற்றுக்கொள்ளாமல் அரசாங்கமும் சில திருத்தங்கள் கொடுத்திருக்கும்போது, எதிர்க் கட்சியிலோ ஆளும் கட்சியிலோ உள்ள உறுப்பினர்கள் சில திருத்தங்களைக் கொடுத்தால், அவற்றை ஏற்றுக்கொள்வதில் என்ன தவறு இருக்க முடியும்? செலக்ட் கமிட்டியிலே முடிவு செய்துவிட்ட பிறகு சபையிலே திருத்தம் ஒன்றுமே கொடுக்கக்கூடாது என்ற நிலைமை எப்படிப் பொருந்தும்?

**Mr. SPEAKER** : I am not giving a ruling. But I may tell hon. Members that in the Parliaments in America, most of the work is done in Committees and once the Bill comes out of the Committee, no amendment will be moved in the House. I am giving this only for the information of the Members and I am not giving any ruling.

* **The Hon Sri R. VENKATARAMAN**: கனம் சபாநாயகர் அவர்களே, சர்க்காரும் திருத்தம் கொடுத்தார்கள் என்று கனம் அங்கத்தினர் அவர்கள் குறிப்பிட்டார்கள். சர்க்கார் கொடுத்திருக்கும் திருத்தங்களெல்லாம் வெறும் "வெர்பல் அமெண்ட்மெண்ட்"கள். அச்சுப் பிழை, வார்த்தை விட்டுப் போனது போன்ற திருத்தங்களே தவிர, வேறு ஒன்றுமில்லை. நாம் இன்றைக்குச் செய்த மாறுதல் என்னவென்று சொன்னால், 'பல்மைரா பைபர்''க்கு வரியைக் குறைத்ததுதான். அதைத் தவறு என்று கனம் அங்கத்தினர் சொல்கிறாரா என்று எனக்குப் புரியவில்லை. பெரிய அளவுக்கு இதெல்லாம் நன்றாக விளக்கமாக விசாரணை செய்யப்பட்டது என்றுதான் நான் எடுத்துக்காட்ட விரும்புகிறேன்.

இன்னும், உத்தியோகஸ்தர்கள் சரியான முறையிலே நடந்துகொள்ள வேண்டும் என்று ஆலோசனை கூறப்பட்டது. பொதுவாக, உத்தியோகஸ்தர்கள் எப்படி நடந்துகொள்ளுகிறார்கள் என்பதை நாம் பார்க்கும்போது, எந்த எந்த இடங்களிலே வியாபார ஏமாற்றம் நடக்கிறது, கணக்குகள் ஏமாற்றம் நடக்கிறது என்று நினைக்கிறார்களோ அந்த இடங்களிலே அவர்கள் சற்றுக் கடுமையாக நடவடிக்கை எடுக்கவேண்டியிருக்கிறது. நடவடிக்கை எடுத்தவுடன் அந்த வியாபாரி நேராக ஓடிவந்து என்னிடத்திலோ, சட்டசபை அங்கத்தினர்களிடத்திலோ வந்து, தங்களுடைய தவறும் பகுதியை மறைத்து, அதிகாரி என்ன செய்தார் என்று மாத்திரம்

சொல்வதால் நமக்குக்கூட ''ஏன் தப்பு செய்கின்றார்கள் நம்முடைய அதிகாரிகளெல்லாம்'' என்று கோபம் வந்துவிடுகிறது. உண்மையாக எல்லா விஷயங்களையும் பரிசீலனை செய்து பார்த்தால், எந்த இடங்களில் முன்பு கணக்குகளில் தவறு இருக்கிறது என்று கோர்ட்டுகளிலே தீர்ப்பு ஏற்பட்டதோ, அந்த இடங்களில் தவறு நடந்து இருக்கிறது என்பதற்குச் சற்று ஆதாரம் கிடைக்கிறதோ அங்கெல்லாம் கடுமையான நடவடிக்கை எடுக்கப்படுகிறது. அவ்வாறு இல்லாவிட்டால் வரி வசூல் செய்வது மிகவும் கஷ்டம். இந்தத் துறையிலே இருக்கும் அதிகாரிகளை நாம் அதிகமாக சட்டசபைகளிலே குறை சொல்லிவிட்டால், அவர்கள் நேர்மையாக வேலை செய்வதில்கூட சற்று அவர்கள் மனம் தளர்ந்துவிடுவார்கள். ஆகவேதான் இதை நான் வற்புறுத்திச் சொல்ல விரும்புகிறேன். ஏனென்றால், நியாயப்படி அவர்கள் நடப்பார்கள். நியாயப்படி அவர்கள் நடக்கவேண்டும். அவ்வாறு நியாயப்படி அவர்கள் நடக்காமல், ஏதாவது தங்களுக்கு இருக்கும் சொந்தமான வருத்தங்களை வைத்து, தவறாக ஏதாவது வர்த்தகர்களை அவர்கள் புண்படுத்துவார்களானால், தொந்தரவு கொடுக்கக்கூடிய நிலைமை ஏற்படுத்தினால், அவர்கள் மீது கடுமையான நடவடிக்கை எடுப்பதற்குச் சர்க்கார் தயங்காது. அதேபோல், வர்த்தகர்களும் இந்த விஷயத்தில் ஒத்துழைக்க வேண்டும் என்று நான் மிகவும் தாழ்மையாகக் கேட்டுக்கொள்ளுகிறேன். அந்த ஒத்துழைப்பைக் கொடுப்பார்களானால் இந்த வரி வசூல் செய்வதில் நமக்கு எந்தவிதமான கஷ்டமும் இருக்காது. இதை வர்த்தகர்கள் மீண்டும் நன்றாக உணர்ந்துகொள்ளவேண்டும். இது வர்த்தகர்கள் கொடுக்கின்ற வரி அல்ல; மக்களால் கொடுக்கப்படுகின்ற வரி. அந்த விற்பனை வரி பணத்தை மக்களிடத்தில் விலை வைத்து வாங்குகிறார்கள். அப்படித்தான்
1-20 p.m. வாங்க வேண்டும். மக்களிடத்தில் விலைவைத்து வாங்கவில்லை என்று அவர்கள் சொன்னால் அது தவறு. சட்டத்தின் அடிப்படையில் அப்படி இல்லை. மனிதருடைய இயல்பும் அப்படித்தான். மனிதர்களுடைய இயல்பு என்னவென்றால் பண்டங்களுக்கு விலை வைக்கும்போது அதற்குள்ள விற்பனை வரி தொகையையும் சேர்த்து வைத்துத்தான் விலை வைக்கிறார்கள். சிலர் தனியாக வாங்குகிறார்கள். சிலர் மொத்தமாக வாங்குகிறார்கள். மொத்தமாக விலை வைத்து வாங்கும்போது பண்டங்களின் விலையுடன் இந்த வரிப்பணத்தையும் சேர்த்து வைத்துத்தான் வாங்கப்படுகிறது. இது நம்முடைய கண் முன்னால் தெரிவது இல்லை. நம்முடைய கண்ணுக்குத் தெரியாமல் அவர்கள் விலையை கூட்டி வைத்து வாங்குகிறார்கள். சாதாரணமாக பண்டங்களுக்கு 5 அல்லது 6 பர்செண்ட் வரி விதிக்கப்பட்டிருக்கிறது என்று சொன்னால் இந்த 5 அல்லது 6 பர்செண்டையும் விலையுடன் சேர்த்து வைத்துத்தான் வாங்குகிறார்கள். இந்த 5 அல்லது 6 பர் செண்ட் வரியைக் குறைத்து விட்டால் பண்டங்களின் விலையும் குறைந்து போய்விடும். பண்டங்களை வாங்குகிறவர்கள் என்ன நினைக்கிறார்கள் என்றால் பண்டங்களின் விலைதான் அதுவோ என்று நினைக்கிறார்கள். வியாபாரப் போட்டி இருக்கும் நாடுகளில் அப்படித்தான் நடக்கிறது. வியாபாரிகள் போட்டியின் நிமித்தம் பண்டங்களில் விலையோடு வரியையும் சேர்த்து வைத்துத்தான் விலை வைக்கிறார்கள். இந்த இரண்டு விலையும் சேர்ந்தது தான் அந்தப் பண்டங்களின் விலை என்று நிர்ணயம் செய்து வசூலிக்கிறார்கள். அந்த வரிப்பணத்தைச் சேர்க்காவிட்டால் பண்டத்தின் விலை குறைந்து விடும். அப்படிச் செய்தால் மற்றவர்களுடைய வியாபாரம் பாதிக்கப்படும். அதனால் அவர்கள் எல்லோரும் சேர்ந்துதான் விலையுடன் வரிப்பணத்தையும் சேர்த்து விலை வைத்து விற்கிறார்கள். இந்த முறையில் எல்லா நாடுகளிலும் நடைபெற்று வருகிறது. அப்படி இல்லாமல் வியாபாரிகள் தாங்கள்தான் கொடுக்கிறோம் என்று நினைத்துவிடக்கூடாது. உண்மையிலேயே பார்க்கப் போனால் அவர்கள் மக்களிடத்திலிருந்துதான் அந்தப் பணத்தை வாங்குகிறார்கள். இல்லாவிட்டால் பண்டங்களைக் குறைத்துக் கொடுத்து அந்தப் பணத்தைச் சம்பாதித்துக் கொள்ளுவார்கள். சாதாரணமாக இப்பொழுது அவல், பட்டாணி முதலியவைகள் விற்கப்படுவதைப் பார்க்கலாம். ஒன்று அவைகளுக்கு அதிகப்படியாக விலை வைத்து வாங்குவார்கள். இல்லா விட்டால் காகிதத்தை படியின் அடியில் அடைத்து விட்டு அளவைக் குறைத்துக் கொடுக்க

14th February 1959] [Sri R. Venkataraman]

முன்வருகிறார்கள். வெளியில் பார்த்தால் ஆழாக்கில் அளவு பெரியதாகக் காணப்படும், ஆனால் உள்ளே வேண்டிய அளவு காகிதம் அடைக்கப் பட்டிருக்கும். இம்மாதிரிதான் உலகம் பூராவும் நடைபெற்றுவருகிறது. ஆகவே ஒன்று பண்டங்களின் விலையை அதிகரிப்பதின் மூலமாகவும் அல்லது பண்டங்களை குறைவாகக் கொடுப்பதன் மூலமாகவும் தங்களுடைய பணத்தை அவர்கள் வசூலித்துக்கொள்ளுகிறார்கள். ஆகவே எந்த விதத்திலாவது அந்தப் பணத்தை மக்களிடத்திலிருந்து வசூலித்துக் கொள்ளுகிறார்கள். இப்படி நேர்முகமாக இல்லாவிட்டாலும் மறை முகமாகவாவது வசூலித்துக்கொள்ளுகிறார்கள். மேல் நாடுகளில் பார்த் தால் அங்கே இருக்கக்கூடிய ஸ்டோர்களில் சிறு சிறு பண்டங்களை வைத்துக்கொண்டு தாங்கள் வரி என்று வசூலிக்கும் பணத்தை எடுத்து அந்தப் பெட்டியில் போட்டு அது சர்க்காருடைய பணம் என்று நினைக்கிறார் கள். வரி கொடுப்பதை ஏமாற்றக்கூடாது, என்று நினைத்து அப்படிப் போட்டுவருகிறார்கள். ஆகவே அதைப்போலவே இங்கேயும் சர்க்காருக்குக் கொடுக்கவேண்டிய வரிப்பணத்தைக் கொடுக்க முன்வரவேண்டும் ஏமாற்ற முற்படக்கூடாது. அப்படி முற்பட்டால் அதனால் பெரிய கஷ்டம் ஏற்படும். வரிப் பணம் தங்களுடைய பணம் என்று நினைப்பதை மறந்து விட வேண்டும் என்று வியாபாரிகளை நான் கேட்டுக்கொள்ளுகிறேன்.

நடைமுறையில் இன்றைக்குப் பார்த்தால் பல மாறுதல்கள் செய்யப் பட்டு வருகின்றன. இப்படிப்பட்ட மாறுதலினால் எல்லா வியாபாரிகளுக் கும் ஓரளவு நிவாரணம் அளிக்கும் என்பதில் சந்தேகமில்லை. ஆகவே புதியதாக செய்யப்பட்டிருக்கிற இந்தச் சட்டத்தை அமுல் செய்வதில் அவர் கள் நல்ல முறையில் ஒத்துழைத்து நடந்துகொண்டால் ஒவ்வொருவருக் கும் அது நன்மை தரும் என்பதை நான் தெரிவித்துக்கொள்ளுகிறேன்.

அடுத்தபடியாக நான் ஒரே ஒரு விஷயத்தைச் சொல்லிக்கொள்ள விரும்புகிறேன். இப்படிப்பட்ட விற்பனை வரி கொண்டு வருவதன் காரணம் நம்முடைய ராஜ்யத்திலுள்ள வியாபாரம் எந்த விதத்திலும் பாதிக்கப் படக்கூடாது என்பதற்காக இந்தச் சட்டத்திலுள்ள ஒவ்வொரு ஷரத்தையும் நல்ல முறையில் பரிசீலனை செய்து கொண்டு வரப்பட்டிருக்கிறது. அப்படி பரிசீலனை செய்யும்போது சில முக்கியமான விஷயங்களையும் கவனத்தில் எடுத்துக்கொண்டிருக்கிறோம். எதற்கு அதிகமாக வரி விதிக்க வேண்டு மோ அவைகளுக்கு அதிகமாக விதித்தும், கொண்டு வரப்பட்டிருக்கிறது. லக்ஷரி பண்டங்களுக்கு அதிகப்படியான வரி விதித்தால் சர்க்காருக்கு அதிகப்படியான வருமானம் வரும் என்பதில் சந்தேகம் இல்லை. ஆனால் அந்த முறையில் விதித்தால் பல வியாபாரங்கள் நமது ராஜ்யத்தை விட்டு வெளி ராஜ்யங்களுக்குப் போய்விடும். அதன் காரணமாக அவைகளுக்கு வரி அதிகமாக விதிக்கப்படவில்லை. எந்த பண்டங்களுக்கு எவ்வளவு வரி விதிக்க முடியுமோ அந்த அளவுக்குத்தான் விதிக்கப்பட்டிருக்கிறது. எந்த அளவு வரி விதிப்பு தாங்க முடியுமோ " as the commodity can bear " அந்த அடிப்படையில்தான் அவைகளுக்கு வரி விதிக்கப்பட்டிருக்கிறது. சில சந்தர்ப்பங்களில் வரி விதிக்கும்போது ஒரு பண்டத்திற்கு மட்டும் தான் வரி விதிக்கப்படும். ஆனால் இந்தச் சட்டத்தில் எல்லா வகைப் பண் டங்களுக்கும் வரி விதிக்கப்பட்டிருக்கிறது. ஒரு வரி விதிக்கும்போதே எவ்வளவோ எதிர்ப்புகள் வரும். அந்த நிலையில் இதற்கும் எதிர்ப்பு இருக்கலாம். ஆனால் விற்பனை வரி விதிக்கும்போது பல நோக்கங்களைக் கொண்டு வரி விதிக்கப்படுகிறது. வரி விதிப்பதில் பல வகை இருக்கிறது. சில வரி விதிப்புகள் சோஷல் அப்ஜெக்டிவ்ஸ் என்ற அடிப்படையில் விதிக்கப்படுகிறது. ஆனால் விற்பனை வரி அந்த முறையில் இல்லை. சோ ஷல் அப்ஜெக்டிவ் என்ற முறையில் விற்பனை வரியை விதித்தால் விற்பனை கெட்டுவிடும். வியாபாரம் கெட்டுவிடும். ஆகவே விற்பனை வரி விதிப்பின் குறிக்கோள் எப்படி இருக்கவேண்டுமென்றால் சோஷல் அப்ஜெக்டிவாக இருக் கக்கூடாது. பெரிய அளவில் வரிகள் விதிக்கும்போது அதாவது மரண வரி, வருமான வரி முதலியவைகள் விதிக்கும்போது இப்படிப்பட்ட சோஷல் அப்ஜெக்டிவ் வரவேண்டும். இதில் அது என்ன இருக்கிறது.

[Sri R. Venkataraman] [14th February 1959

இதை எப்படி நிறைவேற்ற வேண்டும் என்ற அடிப்படையில் இந்த விற்பனை வரியைப் பொறுத்த அளவில் அப்படிப்பட்ட சோஷல் அப்ஜெக்டிவ் இருக்கக்கூடாது. அதனால் இதற்குப் பல திருத்தங்கள் கொண்டுவந்தபோதிலும் அவைகளை ஏற்றுக்கொள்ள முடியாத நிலைமையில் இருந்தேன்.

கடைசியாக இந்தச் சட்டசபையில் ஒரு வரி விதிப்புச் சட்டத்தை நிறைவேற்ற வேண்டுமென்று நினைத்தால் ரொம்பவும் கஷ்டமாக இருக்கும். ஆனால் இந்த விற்பனை வரிச் சட்டத்தின் மூலமாக நாம் எவ்வளவோ பண்டங்களுக்கு வரி விதிக்கப்போகிறோம். ஆயிரக்கணக்கான வரியை ஒரே சட்டத்தின் மூலமாகக் கொண்டுவந்து நிறைவேற்றப்போகிறோம். மக்களுடைய வாழ்க்கைக்கு அவசியமாக இருக்கும் எல்லா பண்டங்களுக்கும் நாம் இப்பொழுது வரி போடப்போகிறோம். அதுவும் ஒரே சட்டத்தின் மூலமாக, அதுவும் ஒரு முனை கட்டத்திலோ அல்லது பல முனை கட்டத்திலோ போடப்போகிறோம். அப்படிக் கொண்டுவந்து நிறைவேற்றுவதனால் கொஞ்சம் கஷ்டம் அதிகமாகத்தான் இருக்கும்.

இந்த விற்பனை வரிச் சட்டம் சம்பந்தமாக இந்த சட்டசபை அங்கத்தினர்கள் அதிலும் குறிப்பாக அந்த தனிக் கமிட்டியில் பங்கெடுத்துக்கொண்டவர்கள் அவர்கள் கொடுத்த ஒத்துழைப்பை நான் பாராட்டுகிறேன். அவர்களுடைய ஒத்துழைப்பு இல்லாவிட்டால் இவ்வளவு சிறந்த முறையில் இந்தச் சட்டத்தை திருத்தி அமைத்திருக்க முடியாது. அதிலும் ஸ்ரீ கலியாணசுந்தரம் அவர்கள் சொன்னதைபோல் சர்க்காருக்கு வரக்கூடிய வருமானமும் குறையக்கூடாது எந்த விதமான மாறுதல்கள் சொன்னாலும் அதை நன்றாக பரிசீலனை செய்து ஏற்றுக்கொள்ளப்பட்டும் இருக்கிறது என்பதை மிகத் தாழ்மையுடன் தெரிவித்துக்கொண்டு இந்த மசோதாவை நிறைவேற்ற கனம் அங்கத்தினர்கள் இன்னும் தனிப்பட்ட கமிட்டியில் இருந்த அங்கத்தினர்கள் செய்த சேவையை நான் பாராட்டுகிறேன். ஆகவே இதைச் சட்டமாக நிறைவேற்றப்படவேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன்.

MR. SPEAKER : The question is :

'That the Madras General Sales Tax Bill, 1958 (L.A. Bill No. 6 of 1958), as amended, be passed.'

The motion was put and carried and the Bill was passed.

MR. SPEAKER : The House will now adjourn and meet again at 9 a.m. on Monday, the 16th February 1959.

The House then adjourned.